# பளிச்சிடும் மேன்மையைப் பாருங்கள் கண்ணார

# ஹிந்தாலியம்®

## உங்கள் இல்லத்திற்கு வழங்கும் நல்லொளி

வெள்ளியின் பளபளப்பு,
தோற்றத்திலே மதிப்பு,
எளிமையின் வனப்பு...
இதுதான் நீங்கள் பெறுவது,
ஹிந்தாலியம் பாத்திரங்களை
வாங்கும்போது.

ஹிந்தாலியம்
பாத்திரங்களிலே
சமைப்பதும் இன்பம்.
சாப்பிடுவதும்
இன்பம்.

ஹிந்துஸ்தான்
அலுமினியம்
கார்ப்ன் லிட்.




வெள்ளி
போல்
தோற்றம
ளிக்கிறது

எஃகு
போன்று
நீடித்து
ழைப்பது

ஹிந்தால்கோ விலை
ஸ்டெயின்லஸ் ஸ்டீல்
விலையில் மூன்றில்
ஒரு பாகம்தான்

Sobhagya HAC-370 TM

# புதுமையிலும் புதுமை!

**பாங்க் ஆப் பரோடா 4 வியப்பூட்டும் வெவ்வேறு சேமிப்புத் திட்டங்கள் வழங்குகிறது. அவற்றில் ஒன்று, கட்டாயம் உங்களுக்கு ஏற்றதாக இருக்கும். படித்துப் பாருங்கள்; நீங்கள் எளிதில் சேமிக்க வேண்டும், அதிக பலனைப் பெற வேண்டும் என்னும் நோக்கத்துடன்தான் இந்தத் திட்டங்கள் வகுக்கப்பட்டுள்ளன என்பது உங்களுக்கே தெரிய வரும்.**

**1 விழா சேமிப்புத் திட்டம்**
பொங்கல், தீபாவளி, நவராத்திரி, கிறிஸ்துமஸ், ஈத்...உங்கள் விழா எதுவானாலும், அதை சிறப்பாகக் கொண்டாட, போதிய பணம் சேர்ந்து விடும். மாதந்தோறும் குறைந்தது ரூ.25 வீதம் (அதிக தொகையும் கட்டலாம்) ஓராண்டு காலம் விழா வரும்வரை கட்டி வாருங்கள். விழாவின் போது, நீங்கள் கட்டிய பணம், கணிசமான வட்டியுடன் திரும்பக் கிடைக்கும். கூடவே, விழாக்கால அன்பளிப்பு ஒன்றையும் நாங்கள் வழங்குகிறோம்.

**2 மாதாந்தர வருவாய்த் திட்டம்**
"பிக்ஸெட் டெபாஸிட்டில் பணத்தை முதலீடு செய்ய வேண்டும்; ஆனால் வட்டி மட்டும் மாதந்தோறும் கிடைக்க வேண்டும்" என்று நீங்கள் விரும்பினால், இந்தத் திட்டம் உங்களுக்கு உதவும். குறைந்த பட்சம் ரூ.5,000 முதலீடு செய்ய வேண்டும். குறைந்த காலம் 2 ஆண்டுகள் (அதிக காலமெனில் அதிக லாபம்). நீங்கள் முதலீடு செய்யும் பணத்துக்கான வட்டித் தொகை உங்களுக்கோ—அல்லது நீங்கள் விரும்பும் நபருக்கோ—மாதந்தோறும் தவறாமல் வழங்கப்படும்.

**3 கிராம மக்கள் சேமிப்புத் திட்டம்**
உங்களுக்கு 6-மாத அல்லது வருட வருமானம் இருந்து, அத் தொகைக்கு கணிசமான வட்டி பெற விரும்பினால், இந்தத் திட்டத்தை நீங்கள் மிகவும் விரும்புவீர்கள். ரூ.100 அல்லது அதற்கு அதிகமான தொகையை, 6-மாத அல்லது வருடத் தவணைகளில், குறைந்த பட்சம் 3 ஆண்டு காலத்துக்குக் கட்டி வாருங்கள். இறுதியில், நீங்கள் கட்டிய தொகை வட்டியுடன் கிடைக்கும். உங்கள் செல்வங்களின் திருமணங்கள் போன்ற மங்கல நிகழ்ச்சிகளை சிறப்புடன் கொண்டாட உதவும்.

**4 மக்கள் சேமிப்புத் திட்டம்**
தங்கள் பணத்தை பிக்ஸெட் டெபாஸிட்டில் நீண்ட காலம் முடக்கி வைக்க விரும்பாதவர்களுக்கு, இந்தத் திட்டம் கை கொடுக்கும். இந்த 12-மாத சேமிப்புத் திட்டத்தில் பணத்தைப் போட்டு, அதிக வட்டி பெறுங்கள். இதில் ரூ.500 முதல் ரூ.50,000 வரையில் முதலீடு செய்யலாம். பணம் போடத் தொடங்கிய மூன்றுவது மாதத்திலிருந்து, சேமிக்கப்பட்ட தொகையில் 10 சத விகிதத்தை மாதந்தோறும் எடுக்க அனுமதி உண்டு.



மேலும் விவரமறிய, அருகாமையிலுள்ள பாங்க் ஆப் பரோடா ஏஜெண்டை அணுகவும்:

நீங்கள் என்றென்றும் வளமையுடன் வாழ

## பாங்க் ஆஃப் பரோடா

**தலைமைக் காரியாலயம்:**
**மாண்ட்வி, பரோடா.**

அநேகமாக இந்தியாவிலுள்ள ஒவ்வொரு மாநிலத்துக்கும் சேவை செய்ய, 550க்கும் மேற்பட்ட கிளைகள் உள்ளன, மற்ற கிளைகள்: யு.கே., கிழக்கு ஆப்பிரிக்கா, மொரீசு, பிஜி தீவுகள், மற்றும் கயானா.

Sailpi BOB 4 A/71 Tum

# கல்கி

## பொருளடக்கம்

விரோதிகிருது ஆடி 2 ஜூலை 18, 1971





"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.


சந்தா விவரம்:

| | ஒரு வருடம் | ஆறுமாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 20-00 | ரூ. 10-00 |
| இலங்கை (இலங்கை நாணயம்) | ரூ. 21-00 | ரூ. 10-50 |
| இதர நாடுகள் | ரூ. 40-00 | ரூ. 20-00 |

# இந்திய உதவி காப்டன் வெங்கட்ராகவன் பிலிப்ஸ் சைக்கிள் உதவியினுல் உடல் வளத்தை தெம்புடன் வைத்திருக்கிருர்



கிரிக்கெட் பந்தயங்களில் திறம்பட பந்து வீசுவதற்கும், பந்து அடிப்பதற்கும், தடுத்து நிறுத்துவதற்கும் எப்பொழுதும் துடிப்புடன் இருப்பதின் அவசியம் அவருக்குத் தெரியும். தினசரி தன் பிலிப்ஸ் சைக்கிளில் சவாரி செய்வதின் மூலம் அவர் எப்பொழுதும் தெம்புடன் செயலாற்றுகிருர். சந்தேகமில்லை. உலகப் புகழ் வாய்ந்த பிலிப்ஸ் சைக்கிள் ஊக்கமிகு வாலிபர்களுக்கு உகந்தது. உறுதியானது; அனுயாசமாய் சவாரி செய்ய வல்லது. கரடு முரடான சவாரிக்கும் ஈடு கொடுக்க வல்லது. நீங்கள் ஒரு ஸ்கூட்டரோ அல்லது ஒரு மோட்டார் சைக்கிளோ வாங்கும் வரை, எங்கு வேண்டுமானுலும் செல்ல ஒரு பிலிப்ஸ் சைக்கிள் வைத்திருங்கள்.

*ஊக்கமிகு வாலிபர்கள் உகந்து வாங்குவது பிலிப்ஸ் சைக்கிள்.*







# பிலிப்ஸ்

இந்தியாவில் தயாரிப்போர்:
டி.ஐ. சைக்கிள்ஸ் ஆஃப் இந்தியா
அம்பத்தூர், சென்னை-53

உரிமையாளர்கள்:
டியூப் இன்வெஸ்ட்மெண்ட்ஸ் ஆஃப் இந்தியா லிமிடெட், சென்னை

பதிவுபெற்று உபயோகிப்போர்.

J. A. பிலிப்ஸ் கம்பெனி லிமிடெட், புதேயின் பதிவுபெற்ற டிரேட் மார்க்குகள்.

TIC/PH/6373

18-7-1971

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்



மலர் 30



இதழ் 51

# மதுவிலக்கைப் பற்றி...

குற்றங்கள் யாவுமே சட்டத்தை மீறிச் செய்யப்படுபவைதாம். சட்டத்தை மீறிக் குற்றங்கள் செய்யப்படுகின்றன என்பதால் சட்டத்தையே ரத்து செய்து விடுவோம் என்று யாரும் சொல்வதில்லை. மதுவிலக்குச் சட்டத்தைச் சிலர் மீறுகிறார்கள் என்று காரணம் காட்டி மதுவிலக்கையே ரத்து செய்வது சிறிதும் நியாயமல்ல. 'சட்டத்தின் மூலம் மதுப் பழக்கத்தை நிறுத்த முடியாது. மக்களுக்கு நல்லறிவு போதித்து அவர்களாகவே இப்பழக்கத்தை விடுமாறு செய்ய வேண்டும்' என்று சொல்வதில் சாரமில்லை. இந்த அடிப்படையில் எந்தக் குற்றத்தையுமே சட்டம் போட்டுத் தடுப்பதற்கில்லை. 'மக்களுக்கு நன்னெறிகளைப் போதித்து அவர்கள் தாமாகவே குற்றம் செய்யாமல் இருக்கச் செய்யலாம்; சட்டமும் தண்டனையும் வேண்டாம்' என்று இருக்க முடியுமா ?

கள்ளச் சாராயம் காய்ச்சப்படுவது உண்மையே. 'நீரா' முதலியன விஷமாக்கப்பட்டுச் சில மக்களிடையே விநியோகமாவதும் உண்மை. ஆனால் இது காரணமாக மதுவிலக்குச் சட்டத்தை எடுத்து விட்டு, சர்க்கார் லைசென்ஸ் தந்து கள்ளுக் கடைகளை ராஜ்யம் முழுவதும் பகிரங்கமாகத் திறப்பது உசிதமல்ல. இருபது வருடங்களாகக் கள்ளுக் கடைகள் மூடியிருந்ததால் புதிய தலைமுறையினருக்கு மதுப் பழக்கம் ஏற்படவில்லை. இப்போது தங்கள் பெற்றோர்கள், சாராயக் கடைகளுக்குப் போவதை அவர்கள் பார்க்கும் போது, அவர்களுக்கும் அதில் ஒரு சபலம் உண்டாகத்தான் செய்யும். ஒரு கெட்ட வழக்கம் மற்றவர்களையும் நிர்ப்பந்தமாக ஆட்படுத்தும். இளம் தலைமுறையினர் தங்களுடைய பெற்றோரைப் பார்த்துக் கெட்டுப் போவார்கள்.

ஏழைமையிலும், துயரத்திலும் ஆழ்ந்த மக்கள் கவலையை மறப்பதாக எண்ணிக் கொண்டு, கள்ளைத் தேடிச் சென்று தங்களுடைய மூளையைக் கெடுத்துக் கொள்கிறார்கள். இதற்கு வசதியாக அரசாங்கம் ஆயிரக்கணக்கில் கள், சாராயக் கடைகளைத் திறந்தால் இதைவிட, ஏழைத் தமிழ் மக்களுக்கு இழைக்கக் கூடிய பெரும் தீங்கு வேறில்லை. ஏழை மக்களின் அற்ப சம்பாத்தியத்தைப் பறிக்கும் இந்தப் பாபத் திட்டத்தைத் திரு கருணாநிதி அவர்கள் கைவிட வேண்டும். நல்ல மனிதர்கள், அறிவுள்ள மனிதர்கள் தீவிர உணர்ச்சியுடன் விடுக்கும் கோரிக்கையை முதன் மந்திரி கேட்டு அதன்படி நடப்பார் என்றே இன்னமும் நம்புகிறேன். இருபது ஆண்டுகளாக மூடிக்



கிடந்த கள்ளுக் கடைகளை மீண்டும் திறப்பது நல்லாட்சிக்கு ஒரு போதும் உதவாது என்று அவருக்கு வலியுறுத்திக் கூறுகிறேன்.

ராஜ்யம் முழுவதிலும் ஆயிரக்கணக்கில் கள், சாராயக் கடைகளைத் திறந்து கோடானு கோடி ஏழை மக்களை வசியப்படுத்தி, அவர்களுடைய பணத்தைத் திருடிச் சர்க்கார் வருமானத்தைப் பெருக்க எண்ணுவது பரிதாபம்! மக்களின் உண்மையான நலனுக்காகச் சர்க்கார் வருமானம் உயர்த்தப்படவில்லை. சர்க்கார் வருமானம் மக்கள் நலனுக்காகச் செலவாவதைவிட, வோட்டுப் பிடிப்பதற்கான 'இன்ஷ்யூரன்ஸ்' போலவே செலவு செய்யப்படுகிறது.

சர்க்கார் லாட்டரி வந்து ராஜ்யத்தில் சூதாட்ட உணர்ச்சியைத் தூண்டிவிட்டிருக்கிறது. தனி நபர்களும் சட்டத்துக்குப் புறம்பாகச் சூதாட்டங்கள் நடத்துவதற்கு இது பெரிய தூண்டுதல் தந்திருக்கிறது. தனி மனிதர்களின் சூதாட்டத்தில் சர்க்கார் லாட்டரி போல மிகப் பெரிய பரிசுத் தொகைகள் இல்லை; ஆனால் தனி மனிதர்களின் சூதாட்டத்தில் போட்டி மிகக் குறைவு; சர்க்கார் லாட்டரியில் இருப்பது போல் டிக்கட் விற்பது, ஏஜன்ட் கமிஷன் முதலியனவும் இவற்றில் இல்லை. எனவே, இவற்றில் கலந்து கொள்கிறவர்களுக்கு வெற்றி வாய்ப்பு அதிகம். ஆனபடியால், இந்தச் சூதாட்டத் தீமை தமிழ்நாட்டில் வலுவாக வளர்ந்து வருகிறது.

தமிழ் நாட்டில் வெளியாகும் திரைப் படங்களும், அவற்றின் விளம்பரங்களும் பரப்புகிற அதருமத்தைச் சொல்ல வேண்டியதில்லை. திரைப் படம், சூதாட்டம், மதுப் பழக்கம் — இவை மூன்றுமாகச் சேர்ந்து, இருபது ஆண்டுக் காலமாக இருந்து வரும் தமிழ் நாட்டின் பண்பை அடியோடு மாற்றி விடும்.

**(ராஜாஜி 'ஸ்வராஜ்யா'வில் எழுதியது)**

# ராஜாஜியின் கருத்துக்கள் 18-7-1971

பங்களா தேசத்திலிருந்து வந்துகொண்டேயிருக்கும் அகதிகளுக்காக இந்தியா செலவிடும் தொகையைவிட, நாம் இப்போரில் ராணுவ ரீதியில் பிரவேசிப்பதால் ஏற்படும் செலவு குறைவாகவே இருக்கும் என்று சொல்லப்படுகிறது. அகதிகள் பிரச்னை எவ்வளவு பெரிது என்பதைச் சக்திகரமாக உணர்த்துவதற்கு மட்டுமே இந்த வாதம் உபயோகப்படும். ஆனால், செலவினத்தை ஒப்பிட்டுப் பார்த்து, இந்த வாதத்தின் அடிப்படையில் அகதிகளை விட்டு விட்டு, நாம் போரில் இறங்குவதற்கில்லை. 'ராணுவ ரீதியில் நாம் பிரவேசிப்பது' என்பதற்கு என்ன அர்த்தம் என்பதையும் தெளிவுபடுத்திக் கொள்ள வேண்டும். கிழக்கு வங்கத்தை நம் வசமாக்கிக் கொண்டு, அதைத் தொடர்ந்து பாதுகாத்து வருவதே 'ராணுவப் பிரவேசம்' எனில், இந்த நடவடிக்கைக்குத் தேவையான செலவு, அகதிகளுக்காகச் செலவழிப்பதை விடக் குறைவாக இருக்கலாம். ஆனால் உண்மையில் கிழக்கு வங்கத்தை வசமாக்கிக் கொள்வது என்பது பாகிஸ்தானுடன் போர் புரிவதேயாகும் — பாகிஸ்தான் மட்டுமன்றி அதன் நேச நாடுகளுடனும் போர் புரிய வேண்டியதாகும். இப்படிப்பட்ட போர் வெகு நீண்டகாலம் நடக்க வேண்டியிருக்கும். இதற்குத் தேவைப்படும் செலவு மிகப் பெரிதாக இருக்கும். இப்படிப்பட்ட நடவடிக்கையில் நாம் இறங்கினால் இந்தியாவின் பொருளாதாரம் என்ன ஆவது?

இப்போது நாம் செய்யக் கூடியது ஒன்றே. அதனை முன்பே கூறியிருக்கிறேன். மீண்டும் வலியுறுத்துகிறேன். அதாவது, கட்சிப் பற்றற்ற ஒரு சர்க்காரை ஸ்ரீமதி இந்திரா காந்தி அமைக்க வேண்டும். உறுதியான அடிப்படையில் அமைந்த அந்த சர்க்கார், உலக வல்லரசுகளைச் சக்தி வாய்ந்த முறையில் இப்பிரச்னையில் ஈடுபடுத்த முடியும். யாஹ்யா கான் தமது போர் நடவடிக்கைகளை விடுத்து, கிழக்கு வங்கத் தலைவர்களுடன் பேச்சு வார்த்தையில் இறங்குமாறு உலக வல்லரசுகளைக் கொண்டு அவரைக் கட்டுப்படுத்த முடியும். கிழக்கு வங்க அகதிகள் வீடு திரும்பவும், அவர்களால் நமக்கு ஏற்பட்டுள்ள பிரச்னை தீரவும் இது ஒன்றே வழி.

★

பங்களா தேசத்தை அங்கீகரிப்பதில் 'வெற்றுச் சாகஸக் கொள்கை'யைக் கடைப்பிடிப்பதற்கில்லை என்று பிரதமர் கண்டிப்பாகக் கூறியிருப்பது மகிழ்ச்சிக்குரியது. பங்களா தேச விவகாரம் மட்டுமின்றி, எல்லா விஷயங்களிலுமே 'சாகஸக் கொள்கை'யைத் தவிர்க்கத்தான் வேண்டும். மக்களுக்கு ரஞ்சகமாக எதையாவது செய்து பெயர் எடுக்க வேண்டும் என்ற 'பசி'க்கு ஆட்சியாளர்கள் ஆளாகக்கூடாது. விவேகத்துடனும், கட்டுப்பாட்டுடனும் கொள்கைகள் வகுக்க வேண்டும். வரி வருமானமே குறைந்து போகுமளவுக்கு உற்பத்தியைக் குலைக்கிற நிதிக் கொள்கையும் ஒரு சாகஸம்தான். அவசியமான பண்டங்களின் விலையை உயர்த்துகிற கொள்கைகள், குற்றங்களையும் சமூக விரோத நடவடிக்கைகளையும் அதிகரிக்கச் செய்யும்.

லாப நோக்கத்தைக் கொண்ட சுதந்திரமான தொழிற் போட்டிதான் திறமையான

நிருவாகத்துக்கும், இணக்கமான வளர்ச்சிக்கும் உதவி செய்வது என்பதும், சர்க்கார் நடத்தும் தொழில் நஷ்டத்தில்தான் முடிகிறது என்பதும் வேண்டிய அளவுக்கு நிதரிசனமாக நிரூபணமாகிவிட்டன. இதன் பின்பும் அத்தியாவசியமான தொழில் இனங்களுக்கு அதிகமாக சர்க்கார் ஆதினத்தை விஸ்தரிப்பது 'வெற்றுச் சாகஸம்' தான்.

★







சிகரெட் உற்பத்தியை அரசாங்க உடைமையாக்கப் போவதாகச் செய்தி வந்திருக்கிறது. இப்படிப்பட்ட ஒரு கேலிக்கிடமான காரியத்தை ஸ்ரீமதி இந்திரா காந்தி மேற்கொள்வார் என்று நான் நம்பவில்லை. குறைந்த செலவில் புற்றுநோய்க்கு ஆளாக விரும்பும் சில புகைப் பிரியர்களின் கற்பனையில் உதித்த கதையே இது எனஎண்ணுகிறேன்.

★

கடந்த பன்னிரண்டு ஆண்டுகளாகச் சுதந்திரக் கட்சி கூறி வருவதை வலியுறுத்தும் விதத்தில் "மார்ச் ஆஃப் தி நேஷன்" பத்திரிகை எழுதுவது :

டிசம்பர் 1970லிருந்து பிப்ரவரி 1971 வரை (அதாவது பொதுத் தேர்தலுக்கு நெருக்கமான சமயம்) உள்ள காலகட்டம் தில்லி சர்க்காரின் 'லைசென்ஸ் பருவ'மாக விளங்கியது. பல்லாண்டுகளாக நிறுத்தி வைக்கப்பட்டிருந்த லைசென்ஸ்கள் உள்பட மொத்தம் 198 லைசென்ஸ்கள் இந்த மூன்று மாதங்களில் 'தேர்தல் போனஸா'கத் தொழிலபிவிருத்தி அமைச்சகத்தால் வழங்கப்பட்டன. இதே மாதங்களில் 1969–70ல் 54 லைசென்ஸ் களும் 1968–69ல் 46 லைசென்ஸ்களும் 67-68ல் 62 லைசென்ஸ் களும்தான் வழங்கப்பட்டன.

உலகத்திலேயே மிகவும் ஊழல் மலிந்தது என்று சொல்லக்கூடிய, மிகவும் மந்தமான, மிகவும் சிக்கலான லைசென்ஸ் விநியோகம் இந்தியாவில்தான் நடக்கிறது என்று நம் நாடு 'அகில உலக கியாதி' பெற்றுள்ளது.

தொழில் வளர்ச்சி ஏற்படவும், லஞ்ச ஊழல் குறையவும் இந்த லைசென்ஸ் விநியோகத்தை அடியோடு எடுத்துவிட வேண்டும் என்று பல ஸ்தாபனங்கள் கூறிவருகின்றன. அத்தியாவசியமாகச் சில பொருட்களுக்கு லைசென்ஸ் தந்து உற்பத்தி செய்ய நேரிடலாம். இந்த லைசென்ஸ் விநியோகப் பொறுப்பைச் சிறந்த யோக்கியதாம்சம் வாய்ந்த ஒரு சுதந்திரக் குழுவிடம் ஒப்படைத்து, தகுதி ஒன்றின் அடிப்படையிலேயே லைசென்ஸ் வழங்கப்பட வேண்டும்.

★

ஆலைத் தொழில்களைப் பெருக்கி, இயந்திர சகாப்தத்தில் மற்ற நாடுகளுடன் நாம் போட்டி போட முற்பட்டு விட்டோம். இப்படிப்பட்ட ஒரு சபலத்துக்கு நாம் ஆளாகாமலே இருந்திருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும் என்று எண்ணிப் பார்க்கிறேன். 'இந்தியாவின் இயற்கைப் பண்பு, அல்லது ஸ்வதர்மம், சமயத்தையும் தத்துவத்தையுமே முக்கியமாகக் கொண்டது. இந்தத் துறைகளிலேயே நாம் கவனம் செலுத்தி முன்னேற வேண்டும்' என்று ஸ்வாமி விவேகா

நந்தர் உபதேசித்தார். அந்த உபதேசத்தின் படியே நாம் நடந்திருந்தால் இன்று உலகம் முழுவதன் மரியாதைக்கும் பாத்திரமாகி யிருப்போம். ஆலைத் தொழிலில் மிகவும் முன்னேறிய செல்வச் செழிப்புள்ள நாடு களும்கூட இந்தியாவிடம் மரியாதை கொண் டிருக்கும். ஆனால் நாம் விவேகானந்தரின் வாக்கைக் கேட்கவில்லை. லௌகிக சுபிட்சம் என்கிற மாய மோகினிப் பிசாசின் பின் சென்று விட்டோம்.

நவீன சாதனங்களை மேலும்மேலும் தேடிப் போகாமல் சைக்கிள், தையல் மிஷன் இவற் றுடன் நாம் நிறுத்திக் கொண்டிருக்க வேண் டும். காந்தியடிகள் தீர்க்கசிந்தனையுடன் எடுத்துரைத்து வந்தது இதுவே. பௌதிகத் தேவைகளை ஒரு மட்டத்தோடு நிறுத்திக் கொண்டு, நாம் தார்மிக லட்சியங்களை நாடிப் போவதிலேயே ஈடுபட்டிருக்க வேண்டும். தார்மிகப் பண்புகளில் வளர்ச்சி காண்பதே உண்மையான நாகரிகம்.

மேற்கத்திய நாடுகளின் தன்மை வேறானது. அங்குள்ள பொருளாதார நடவடிக்கைகளைப் பார்த்து விட்டு, நம் நாட்டின் ஐம்பது கோடி மக்களுக்குப் பௌதிக ரீதியில் எல்லாத் தேவைகளையும் பூர்த்தி செய்ய முற்படுவது பொருந்தாது; அது காரியத்தில் பலனும் தராது. மாறாக, தர்ம ரீதியில் வளர முயன்றோமாயின் அதில் நாமும் நியாயமான பெருமிதம் கொள்ளலாம்; உலகமும் நம் மைப் போற்றுமாறு செய்யலாம்.

# "கைங்கரிய சிந்தாமணி"



இவ்வுலகில் மிக மிக பாக்கியசாலி யார்? ஒரு பிரம்ம ஞானிக்கு அந்தரங்க சுத்தமாகக் கைங்கரியம் செய்கிறவர்தாம். ஏனெனில், அந்தக் கைங்கரியத்தைத் தவிர இவர் 'ஆத்ம சாதனை' என்று எதுவும் செய்யா விடினும், பிரம்ம ஞானியின் குளிர்ந்த உள்ளத்திலிருந்து பிறக்கும் ஆசி இவருக்குக் கைவல்யம் உட்பட சகல க்ஷேமத்தையும் தந்துவிடும். பிரம்மஞானிகள் தோன்று வது அரிது. அவர்களுக்கு அந்தரங்கசுத்தமாகப் பணி புரிபவர் தோன்றுவதும் அரிதே. நம் பாக்கியவசமாக, பிரம்ம ஞானி என்பதைவிட 'பிரம்ம ஸ்வரூபம்' என்றே வழிபடத் தக்க ஸ்ரீ காமகோடி பெரியவாள் இன்று நம்மிடையே வாழ்ந்து வருகிறார்கள். அவர் களுக்கு அந்தரங்க சுத்தமாகப் பணி புரியும் உத்தம ஜீவர்கள் சிலரும் இருக்கிறார்கள். இவர்களில் சிகா மணியாக விளங்குபவர் 'மானேஜர்' பிரம்மஸ்ரீ விசுவ நாத அய்யரவர்கள். ஸ்ரீ பெரியவாளிடம் ஆத்மார்ப்ப ணம் செய்து, ஸ்ரீ மடத்துப் பணியை அற்புதமாக ஆற்றி வரும் பெரியவர் ஸ்ரீ விசுவநாத அய்யரவர்கள். சாதாரணமாக ஒரு மடத்து மானேஜர் என்றால் அவ ருக்கு என்று ஒரு 'ஜபர்தஸ்து' இருக்கும். மானே ஜர்கள் கையோங்கி மடாதிபதியையே ஆட்டி வைப்பது கூட உண்டு. ஆனால் ஸ்ரீ விசுவநாத அய்யரின் மானேஜர் பதவி இப்படிப்பட்டதல்ல. ஸ்ரீ பெரியவாளிடமும், இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டுகளாக இயங்கி வரும் ஸ்ரீ காஞ்சி காமகோடி ஸ்ரீ மடத்திடமும் இதயபூர்வ மாக அவருக்கு உள்ள பரமபக்தியே எந்த மானேஜரும் பெற முடியாத உயர் அந்தஸ்தை அவருக்குத் தந்துள் ளன. கம்பீரமும், கௌரவமும், கனிவும் அவரிடம் ஒருங்குகூடி, ஸ்ரீ மடத்தைச் செவ்வனே நிர்வகித்து வருகிறார். ஆண்டியிலிருந்து அரசன் வரையில் சகலரும் வருகிற சந்நிதானத்தில் அவரவ ருக்கும் உரியபடி பக்குவமாக நடந்து கொண்டு, குருநாதன் வருக்கும் பலப் பல இட்டங்களி லும் ஈடுபட்டு உழைத்து, அவசியம் ஏற்படும்போது குருநாதனுக்கே தயங்காமல் மாற்று யோசனைகூடச் சொல்லித் தாமும் நற்பெயர் எடுத்து, மடத்தின் நற்பெயரையும் ஓங்க வைத்துள்ள புண்ணிய புருஷர் ஸ்ரீ விசுவநாத அய்யரவர்கள். நாற்பத்து மூன்றாண்டுகளாக ஸ்ரீ மடத்துடன் தம்மை அப்படியே கரைத்துக் கொண்டவர். சமீபத்தில் மிகவும் நோய் வாய்ப்பட்டுக் குருநாதன் அருளால் குணமாகி வருகிறார் ஸ்ரீ விசுவநாத அய்யரவர்கள். இந்த சங்கர கிங்கர சிகாமணிக்கு, ''கைங்கரிய சிந்தாமணி'' என்ற விருதினைச் சமீபத்தில் கார்வேட் நகரில் ஓர் எளிய இனிய விழாவில் ஸ்ரீ காஞ்சி ஆசாரியர்கள் சூட்டிப் பெருமைப் படுத்தியிருக்கிறார்கள்.

'சிந்தாமணி' என்ற கிராமத்தில் பிறந்த ஸ்ரீ விசுவநாத அய்யரவர்களுக்கு, 'சிந்தித பலபரிபோஷண சிந்தாமணி' என்று மூக கவி போற்றும் காமாக்ஷி மயமான பெரியவாள், 'கைங்கரிய சிந்தாமணி' என்று பட்டம் வழங்கியது மிக மிகப் பொருத்தம்தானே?

# மகுடபதி



## அமரர் கல்கி

### பதினைந்தாம் அத்தியாயம்

### மனித நிழல்

செந்திரு பெரியண்ணனைக் குத்தி னாள் என்று அய்யாசாமி முதலியார் சொன்னதும், பங்கஜம் நெருப்பை மிதித்தவள் போல் துள்ளி எழுந்து, "ஐயையோ! என்ன அப்பா சொல்லு கிறீர்கள்?" என்றாள்.

"ஆமாம், அம்மா! நடந்ததைத் தான் சொல்கிறேன்."

"செந்திருவா கத்தியை எடுத்து ஒருவனைக் குத்தினாள்? சொல்கிற வர்கள் சொன்னால் கேட்பவர்களுக்கு மதி எங்கே போச்சு என்பார்களே?..."

அய்யாசாமி முதலியார் புன்னகை யுடன், "எங்கள் மதி எங்கேயும் போகவில்லை. சரியாகத்தான் இருக் கிறது. உன் தோழியின் மதிக்குத்தான் கேடு வந்து விட்டது, எல்லாம் துர திர்ஷ்டந்தான்" என்றார்.

"என்னதான் சித்தப் பிரமை என்றாலும், கத்தியால் குத்தத் தோன்றுமா அப்பா! அதிலும் செந்திரு, பாவம், ஓர் எறும்பு ஈயைக்கூட ஒன் றும் செய்ய மாட்டாளே? ஜட்கா வண்டிக்காரன் குதிரையை அடித்தால், அதைப் பொறுக்காமல் கண்ணைப் பொத்திக் கொள்வாளே? அவள் கத்தியை எடுத்து ஒருவனைக் குத்தினாள் என்றால், எப்படி நம்புகிறது, அப்பா?"

"நம்புவது கஷ்டந்தான், குழந்தை! யார் இல்லை என்றார்கள்? உன் சிநேகி திக்கு இப்படி வர வேண்டாந்தான். ஒரு வேளை அவள் அப்பா உயிரோ டிருந்து, இவளும் மயிலாப்பூரில் பள்ளிக் கூடத்தில் படித்துக் கொண்டு சந் தோஷமா யிருந்திருந்தால், இப்படி யெல்லாம் வந்திராது. தலையில் எழுதிய எழுத்தை யாராலாவது அழித்துவிட முடியுமா? ஆனால், உனக்கு ஒன்று சொல்கிறேன், பங்கஜம்! குத்துவெட்டு எல்லாம் நமக்குத்தான் பயங்கரமே தவிர, இந்த ஜில்லாவில் ரொம்ப சகஜம். நமது சென்னை ராஜதானியிலே வருகிற கொலைக் கேஸுகளிலே பாதி கோயமுத்தூர் ஜில்லாவில்தான். இந் தக் கொங்கு நாட்டின் காற்றிலேயே ஏதோ கேடு இருக்க வேண்டும். உன் சிநேகிதியைத்தான் எடுத்துக் கொள் ளேன். அவள் இப்படி மாறிப் போவா ளென்று யார் கண்டார்கள்? அப்பா! என்ன பயங்கரமான கூச்சல்! 'குத்து' 'வெட்டு' 'கொலை' 'இரத்தம்' 'பலி' என்றெல்லாம் அவள் போட்ட பயங்கர மான கூச்சலைக் கேட்டிருந்தால், நீ நடுங்கிப் போயிருப்பாய்" என்றார் முதலியார்.

"ஐயோ! அப்படியா? நீங்களே பார்த்தீர்களா அப்பா!"

"அதுதான் சொன்னேனே, நீ இப் படிக் கேட்பாய் என்று தெரிந்துதான் நேரே போய்ப் பார்த்து விட்டு வந்து விடுவோம் என்று ராவ்பகதூரிடம் சொன்னேன். எல்லாருமாக மத்தி யானம் கிளம்பினோம்...."

"எங்கே கிளம்பினீர்கள்? அப்படி யானால் செந்திரு இப்போது சிங்கமேட் டில் இல்லையா?" என்று பங்கஜம் கேட்டாள்.

"நீலகிரியில் கூனூருக்கு மேலே கொஞ்ச தூரத்தில் தேவகிரி எஸ்டேட் இருக்கிறது. அது கள்ளிப்பட்டிக் கவுண் டர் எஸ்டேட். அங்கே கவுண்டருடைய



பங்களாவில்தான் இப்போது செந்திரு இருக்கிறாள். குளிர்ச்சியான இடத்தில் இருந்தால் சித்தப் பிரமைக்கு அனுகூலம் என்று டாக்டர் சொன்னதன் பேரில் அங்கே அழைத்துப் போய் வைத்திருக்கிறார்களாம். இன்றைக்கு மத்தியானம் இரண்டு கவுண்டர்களும் போய்ப் பார்த்துவிட்டு வர எண்ணியிருந்தார்களாம். ஆகவே, எல்லாருமாகக் கள்ளிப்பட்டிக் கவுண்டர் காரிலேயே கிளம்பினோம். ஹட்ஸன் கார் மலையிலே என்ன ஜோராக ஏறிற்று, தெரியுமா?......''

''காரில் போன பெருமை இருக்கட்டும், அப்பா! செந்திருவின் கதியை நினைத்தால் எனக்கு என்னமோ செய்கிறது. ரொம்ப வேதனையாயிருக்கிறது. அவளை நீங்கள் பார்த்தீர்களா? உங்களை அவள் அடையாளம் கண்டு கொள்ள வில்லையா?'' என்றாள் பங்கஜம்.

''அடையாளமாவது, கண்டு கொள்ளவாவது! கார் பங்களாவின் மேட்டில் ஏறும்போதே பயங்கரமான கூச்சல் சத்தம் கேட்டது. பங்களா வாசலில் கார் நின்றதும், 'யாரடா தடிப் பசங்கள், காரிலே வந்து இறங்குகிறது?' என்று ஒரு கோரமான குரல் கேட்டது. உன் தோழியின் குரல் எவ்வளவு கோரமாய்ப் போய் விட்டது, தெரியுமா? பிறகு, 'கொண்டு வா, நரபலி' 'கழுத்தை முறித்து இரத்தத்தைக் குடிக்கிறேன்!' 'குத்து, வெட்டு!' என்று கூச்சல் கிளம்பிற்று. அதையெல்லாம் விவரமாக உனக்குச் சொல்லக் கூடாது. சொன்னால் ராத்திரியில் உளறியடித்துக் கொள்வாய். கார்க்கோடக் கவுண்டர் எங்களைப் பார்த்து, 'என்ன சொல்கிறீர்கள்? அழைத்துக் கொண்டு போகிறீர்களா?' என்று கேட்டார்.

''நாங்கள் என்னத்தைச் சொல்கிறது? ராவ்பகதூரும் நானும் ஒருவரையொருவர் பார்த்து அசட்டுச் சிரிப்பு சிரித்துக் கொண்டோம். பங்களா வாசலிலிருந்தபடி, காரிலிருந்து கீழே இறங்காமலேயே நாங்கள் திரும்பிப் போகத் தயாராயிருந்தோம். ஆனால், கார்க்கோடக் கவுண்டர் விடவில்லை. உள்ளே வந்து பார்க்க வேண்டும் என்றார், பங்களாவுக்குள் போனோம். பாவம், அங்கே ஓர் அறையில் செந்திருவைப் பூட்டி வைத்திருக்கிறது. புத்தி கொஞ்சம் தெளியும் போது வெளியே விடுகிறார்களாம். நாங்கள் போனபோது பைத்தியம் ரொம்பக் கடுமை. ஜன்னலண்டையில் கவுண்டர் எங்களை அழைத்துப் போனபோது, அங்கிருந்த சமையற்காரி வந்து குறுக்கிட்டு, 'அந்தப் பெண் துணியையெல்லாம் கிழித்துப் போட்டுவிட்டு உட்கார்ந்திருக்கிறது' என்றான். அந்தக் கண்ராவியை என்னால் பார்க்க முடியாது என்று சொல்லி விட்டேன். ராவ்பகதூரின் கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு, கவுண்டர் ஜன்னலண்டை போனார். உள்ளேயிருந்து ஒரு தண்ணீர்க் குவளை ஜன்னல் கம்பிகளின் மேல் வந்து படீரென்று விழுந்தது. ராவ்பகதூர் ஒரேயடியாக மிரண்டு விட்டார். அப்புறம் என்னத்தைச் சொல்கிறது? பேசாமல் திரும்பி வந்தோம்'' என்று கதையை ஒருவிதமாக முடித்தார், அய்யாசாமி முதலியார்.

பங்கஜம் சற்று மௌனமாயிருந்தாள்.

''படுத்துக் கொள்ளலாமா, குழந்தை! நான் போகட்டுமா?'' என்றார் முதலியார்.

''ஆமாம், அப்பா! அவ்வளவு பைத்தியம் முற்றியிருந்தால், கடுதாசி அவ்வளவு நன்றாக எப்படி எழுதினாள்?'' என்று பங்கஜம் கேட்டாள்.

''நான்தான் சொன்னேனே, அம்மா! கோயமுத்தூருக்கு ஓடி வந்தபோது, அவளுக்கு உடம்பு அவ்வளவு மோசமாயில்லை என்று.''

''சரிதான்; ஆனால், கடிதம் நம் வீட்டுக்கு எப்படி வந்ததாம்? யாரிடம் அனுப்பினாளாம்?''

''சரியாய்ப்போச்சு! அதை இன்னும் உனக்குச் சொல்லவில்லையா? இந்த ஊரில் அனுமந்தராயன் தெரு வீட்டு மச்சில் செந்திருவும், பெரியண்ணனுமா யிருந்த போது, இவள் கடிதம் எழுதி வைத்துக்கொண்டுஜன்னல் வழியாய்த் தெரு வீதியைப் பார்த்துக்கொண்டிருந் திருக்கிறாள். இந்த மருடபதி என்கிற பையன் தெருவோடு போயிருக்கிறான். செந்திரு கடிதத்தை வீதியில் போட் டிருக்கிறாள். இந்த மருடபதி என்கிற பையன் சுத்தக் காலாடி யாம். ஏற்கனவே, சிங்க மேட்டுக் கவுண்டர் மேல் அவனுக்கு விரோதமாம். கடிதத்தை அவன் நம் வீட் டில் கொண்டு வந்து கொடுத்து விட்டு, போலீஸ் ஸ்டேஷ னுக்குப் போய்க் கன்னாபின்னாவென்று ஏதோ சொல்லி வைத்தானாம். சிங்க மேட்டுக் கவுண்டர் பெயரைச் சிரிப் பாய்ச் சிரிக்க அடிப்பதற்கு இதுதான் சமயம் என்று நினைத்தான் போல் இருக் கிறது. அவன் மேல் கள்ளிப்பட்டிக் கவுண்டருக்கு என்ன 'காண்டு' தெரி யுமோ? 'அந்தப் பயல் மட்டும் மறுபடி யும் என் கையில் சிக்கட்டும், முதுகுத் தோலை! உரித்துவிட்டு மறு காரியம் பார்க்கிறேன்' என்கிறார். கள்ளிப்பட் டிக் கவுண்டர் என்றால் என்னவென்று நினைத்தாய், குழந்தாய்! இந்த ஜில்லாவி லேயே அவர் வைத்ததுதான் சட்டம். பெரிய உத்தியோகஸ்தர்கள் எல்லாம் கூடப் பயப்படுவார்கள். ஜில்லா



போர்ட் பிரஸிடெண்ட் அன்று பேரூருக்கு வந்த போது தடபுடல் பட்டதே, அந்தப் பிரஸிடெண்டுக்குக் கள்ளிப்பட்டிக் கவுண்டர் என்ற பெயரைக் கேட்டால் தொடை வெட வெடவென்று நடுங்குமாம்! அப்படிப்பட்டவர் கிட்டப் போய் இந்த மருடபதி என்கிற வெறும் பையன் விரோதித்துக் கொண்டிருக்கிறான். 'காங்கிரஸ் பெயரையும், காந்தி பெயரையும் கெடுக்கத்தான் வந்திருக்கிறான்' என்கிறார் கள்ளிப்பட்டிக் கவுண்டர்.''

இவ்விதம் சொல்லிவிட்டு அய்யாசாமி முதலியார் கொட்டாவி விட்டார்.

மருடபதியைப் பற்றிப் பங்கஜம் கட்டியிருந்த ஆகாசக் கோட்டையெல்லாம் பொலபொலவென்று இடிந்து விழுந்தது.

''என்னமோ கேட்கக் கேட்க விசனமாயிருக்கிறது அப்பா! ஆனால் இன்னும் ஒரு விஷயம் மட்டும் எனக்குப் பிடிபடவில்லை. எனக்குச் செந்திரு எழுதிய கடிதத்தை மருதக் கவுண்டன் ஏன் திருடினான்? அந்தக் கடிதம் உங்கள் அழகான கள்ளிப்பட்டிக் கவுண்டரிடம் எப்படிப் போயிற்று?'' என்று பங்கஜம் கேட்டாள்.

''அது ஒரு விஷயம் பாக்கியிருக்கிறதா? சரி, கேட்டுக் கொள். செந்திரு உனக்குக் கடிதம் எழுதி வீதியில் போட்டாள் என்று பெரியண்ணன் கவுண்டர்களிடம் ஒளித்திருக்கிறான். சித்த ஸ்வாதீனமில்லாத சமயத்தில் அவன் என்ன எழுதியிருக்கிறாளோ என்னமோ—இந்த வெட்கக்கேடு வெளியில் நாலு பேருக்குத் தெரிவானேன் என்று அவர்களுக்கு எண்ணம். அதற்காகத்தான் நீயாவது நானாவது கடிதத்தைப் பிரித்துப் படிக்கா விட்டால் எடுத்துக் கொண்டு வந்து விடும்படி அவர்கள் சொல்லியிருக்கிறார்கள். இந்த முட்டாள் நமக்கு விஷயம் தெரிந்த பிறகு எடுத்துப் போயிருக்கிறான். அதற்காக அவனுக்கு அங்கே நல்ல பூசை கிடைத்ததாம். கவுண்டர்களே நம்முடைய வீட்டுக்கு வந்து இதையெல்லாம் சொல்ல வேண்டுமென்றிருந்தார்களாம். அதற்குள்ளே நாங்கள் போய்...'' என்று முதலியார் சொன்னபோது அவருடைய தலை ஆடிற்று.

''சரி, அப்பா, உங்களுக்குத் தூக்கம் கண்ணைச் சுற்றுகிறது. நீங்கள் போய்ப் படுத்துக் கொள்ளுங்கள். நானும் விளக்கை அணைத்து விட்டுப் போய்ப் படுத்துக் கொள்கிறேன்'' என்றாள் பங்கஜம்.

''சரி, அதிக நேரம் கண் விழிக்காதே. நாவல் எழுதினதெல்லாம் போதும். உன் சிநேகிதியின் கதையேதான் பெரிய நாவலாயிருக்கிறதே!'' என்று சொல்லிக்கொண்டே அய்யாசாமி முதலியார் எழுந்திருந்து போனார்.

பங்கஜமும் தன்னுடைய நோட்டுப் புத்தகத்தை மூடி வைத்து விட்டு எழுந்திருந்து விளக்கை அணைப்பதற்காகப் போனாள். அப்போது அவள் உடம்பை ஒரு குலுக்கு குலுக்கிப் போட்டது. ஒரு நிமிஷம் அவள் மார்பு அடித்துக்கொள்வது நின்று விட்டது. ஏனெனில், விளக்கை அணைப்பதற்காக அவள் எழுந்து போனபோது, ஜன்னலுக்கு எதிர்ப் பக்கத்துச் சுவரில் ஒரு மனிதனுடைய நிழலை அவள் பார்த்தாள்.

(தொடரும்)



ஆந்திரப் பிரதேச முதலமைச்சர் திரு கே. பிரமானந்த ரெட்டியாரின் சகோதரி குமாரன் சிரஞ்சீவி கங்காதருக்கும், (திரு கோட்டி ரெட்டியின் குமாரர்) ஆந்திரப் பிரதேச ரெவின்யூ அமைச்சர் திரு பி. திம்மா ரெட்டியாரின் குமாரத்தி சௌ. ரமாவுக்கும் ஹைதராபாத்தைச் சேர்ந்த ஷாபுர்வாடியில் 18-6-71 அன்று மிகவும் சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது. ஆந்திரப் பிரதேச கவர்னர் திரு கந்துபாய் தேசாய், திரு சென்னா ரெட்டி (தலைவர், தெலுங்கானா பிரஜா சமிதி), ஆந்திரப் பிரதேச சபாநாயகர் திரு பி. வி. சுப்பா ரெட்டி, மற்றும் சட்ட சபை அங்கத்தினர்களும் ஆந்திரப் பிரதேச உயர்நீதி மன்றத்து நீதிபதி திரு கே. வி. எல். நரசிம்மன் முதலிய பிரமுகர்களும், சினிமா நடிகர்களும் வருகை தந்து சிறப்பித்தனர். ஏராளமான வாழ்த்துத் தந்திகள் வந்து குவிந்தன. ''கல்கி'' ஆசிரியர் ஸ்ரீ சதாசிவம், ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி இருவரும் புதுமணத் தம்பதிக்கு மலர் மாலை அணிவித்தனர்.

வாழ்க மணமக்கள்!

Who cares if your hair is different?

# Sunsilk cares – with 3 special shampoos

## Pick the one that's perfect for you

**Sunsilk Lemon Shampoo**
**For Greasy Hair:** Gently washes out excess grease... gives you days of clean, bouncing, silken hair.

**Sunsilk Tonic Shampoo**
**For Dry Hair:** Contains Allantoin to nourish your hair...revives that silken lustre, leaves hair softly glowing.

**Sunsilk Beauty Shampoo**
**For Normal Hair:** Perfectly balanced to keep your hair in beautiful condition, weaving silk into every strand.




**Sunsilk** – more than a shampoo, a cosmetic for your hair

*Quality Products by HINDUSTAN LEVER*

LINTAS-SS. 11-140

# நல்ல தேநீர் ரசிக்கப்படும் எல்லா இடங்களிலும் — குடும்பங்கள் விரும்பி வாங்குவது லிப்டன் ஹிமாலயன் கோல்டன் டஸ்ட்

குடும்பத்திலுள்ள ஒவ்வொருவரும் விரும்பி அருந்தும் டீ இதுவே. விருந்தினர்களும் அவ்வாறே. லிப்டன் ஹிமாலயன் கோல்டன் டஸ்ட் திருப்தியளிக்கும் மணமுள்ள சத்து நிறைந்த, ருசிமிக்க கெட்டியான பானம். ஒவ்வொரு பாக்கெட்டிலும் அதிக அளவு கோப்பைகள் கிடைக்கின்றன. லிப்டன் ஹிமாலயன் கோல்டன் டஸ்ட் உங்கள் குடும்பத்தார் அருந்தி மகிழ்வது. விருந்தினர்கள் விரும்பி அருந்துவது.

பாக்கிங் செய்த தேயிலை மட்டுமே புதிதாகவும், மணத்துடனும் திகழ்கிறது.

**லிப்டன் என்றாலே நல்ல டீ**



# நிறைந்த ஆனந்தம்

## ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய ஸ்வாமிகள் அருளுரை

கிருத யுகத்தில் பிருகு என்பவர் தம்முடைய பிதாவான வருணனிடத்தில் போய், ''நிறைந்த வஸ்து எதுவோ அதை எப்படி அறிவது?'' என்று கேட்டாராம். ''நிறைந்த வஸ்து எதுவோ அது காலத்தாலும் நிறைந்து இருக்க வேண்டும். தேசத்தாலும் நிறைந்து இருக்க வேண்டும். வஸ்துவிலும் நிறைந்து ஒரு குறை என்பதே இல்லாமல் இருக்க வேண்டும். அத்தகைய நிறைந்த வஸ்துவை எனக்குச் சொல்ல வேண்டும்'' என்று போய்ப் பிதாவான வருணனிடத்தில் கேட்டாராம்.

''நீ போய் தபஸ் பண்ணு. அது உனக்கே தெரியும்'' என்று வருணன் சொல்லி விட்டார்.

''அப்படியே செய்கிறேன்'' என்று சொல்லி விட்டு பிருகு போய்த் தபஸ் பண்ண ஆரம்பித்தார். அதனால் அவருக்கு ஒன்று தெரிந்தது. 'இந்தச் சரீரந்தான் உயர்ந்த வஸ்து. இது தான் எல்லாவற்றையும் உணர்கிறது. உணரப்படுகிற பொருளைக் காட்டிலும் உணர்ந்து கொள்கிற பொருள் உயர்ந்தது. அது இந்தத் தேகந்தான்'' என்று தீர்மானம் பண்ணிக் கொண்டு அப்பாவிடம் போய், ''இந்தச் சரீரம்தான் உயர்ந்த, நிறைந்த வஸ்து'' என்று சொன்னாராம்.

அவர் திரும்பவும் ''இன்னும் கொஞ்சம் தபஸ் பண்ணு'' என்று சொல்லி விட்டாராம்.

இப்படியே கொஞ்சம் தபஸ் பண்ணுவது உடனே தமக்குத் தோன்றியதைப் போய்ச் சொல்வது என்று ஐந்து தடவைகள் பிருகு செய்தாராம். முதலில் உடம்பு நிறைந்த வஸ்துவாகத் தோன்றிற்று. பிறகு உயிர் நிறைந்த வஸ்துவாகத் தோன்றிற்று. அதன் பின் மனமே நிறைந்த வஸ்து என்று தோன்றிற்று. பிற்பாடு அறிவே நிறைந்த வஸ்துவாகத் தோன்றியது. ஐந்தாம் முறை போனபோது ஆனந்தானுபவம் தான் நிறைவாகத் தோன்றியது. ''நீங்கள் சொன்னபடி நான் இத்தனை நாட்களாகத் தபஸ் பண்ணினேன். இப்போதெல்லாம் இடையில் ஏதோ ஒருவிதமான ஆனந்தம் ஸ்புரிக்கிறதே. இது என்ன?'' என்று தந்தையைக் கேட்டாராம் பிருகு.

''உனக்கு ஒவ்வொரு சமயத்தில் ஆனந்தம் ஸ்புரிக்கிறது என்று சொல்கிறாயே அந்த ஆனந்தம்தான் நிறைந்த வஸ்து. இது உனக்குத் துளித் துளி உண்டாகிறது. இதுவே நிறைந்து விட்டதானால் அதைத்தான் பேரானந்தம் என்கிறோம். அந்தப் பேரானந்தந்தான் எப்போதும் குறைவு இல்லாத, காலத்தாலும், தேசத்தாலும் நிறைந்து இருக்கும்படியான ஒரே வஸ்து'' என்று பிதா சொன்னாராம். இப்படி ஒரு உபநிஷதக் கதை இருக்கிறது.

அந்தப் பேரானந்த சமுத்திரத்தின் ஏதோ ஒரு திவலைதான் நமக்கு எப்போதாவது உண்டாகிறது. கிளைகள், இலைகள் எல்லாம் அடர்ந்து இருக்கும் ஒரு மரத்தடியில் உட்கார்ந்தால் கீழே கொஞ்சம் கூட வெயில் படாமல் நிழல் இருக்கிறது. காற்று அடிக்கும் போது, இலைகள், கிளைகள் நகர்ந்து விலகுகிற சமயத்தில் சூரியனுடைய வெயில் கீழே அந்த இடைவெளி அளவுக்கு விழுகிறது. அப்புறம் மறுபடியும் அது மறைந்துவிடுகிறது. அந்த மாதிரியாகத்தான் நமக்கு ஆனந்தம் வருகிறது. ஆனந்தம் என்பது எங்கும் பரிபூரணமாக நிறைந்திருக்கும்படியான வஸ்து. ஆனால் நம்முடைய கெட்ட கர்மா, மனம், புத்தி இவற்றினால் அது நம்மிடம் படாமல் மறைந்திருக்கிறது. ஒரு க்ஷணம் நாம் பண்ணியிருக்கிற புண்ணிய கர்மாக்களினாலே அவை விலகும் போது காற்று அடித்து இலைகள் விலகும் போது சூரியன் ஒளி அதன் வழியாக வருவது போல், நம்முடைய கர்மாக்கள் விலகியதால், எங்கும் பரவிய ஆனந்தத்தின் திவலை நமக்கு உண்டாகிறது. இதுவே வளர்ந்து விட்டால் பேரானந்தமாகிறது. அந்த ஆனந்த சமுத்திரத்தின் லவலேசத்தைத்தான் நாம் எப்போதாவது அடைந்தவுடன் மிகவும் ஆனந்தமாக இருக்கிறோம் என்று சொல்லிக் கொள்கிறோம். தபஸ் பண்ணிப் பண்ணி விசாரம் செய்தால் எப்போதும் ஆனந்த மயமாக இருக்கும் சமுத்திரத்திலேயே கலந்து இருக்க முடியும்.








ஹிந்து உயர்நிலைப் பள்ளி-அன்னிபெஸண்ட் சிலை

**கா**சி என்ற பெயரைக் கேட்டதும் நம் நினைவுக்கு வருபவை இரண்டு. முதலாவது கங்கை ஆறு. மற்றது பட்டாடை. இவற்றைத் தவிரவும் இந்த நகருக்குப் பல சிறப்புக்கள் உண்டு. அவைகளை அறிய இங்கு நேரில் வரவேண்டும்.

முன்னாளில் காசி என்று ஒரு குறுநிலத்துக்கே பெயர். இதன் அரசன் மகாபாரதப் போரில் கௌரவர்களின் சார்பில் நின்றதை ஸ்ரீமத் பகவத்கீதையின் மூலம் அறிகிறோம். வடக்கில் வருணநதியும் தெற்கில் அஸி என்ற ஆறும் நகரத்தை அணைத்து நிற்கின்றன. இந்த இரு நதிகளின் பெயரே வாராணஸி என நகரத்துக்கு அமைந்து விட்டது.

ரயில் நிலையத்துக்குள்ளும் மேம்பாலத்திலும்கூடப் பசுமாடுகள் நின்று அசை போடுவதைக் காணலாம். யாரும் ஓட்டமாட்டார்கள். பாலத்தில் பல பிச்சைக்காரர்கள் படுத்து உறங்குகிறார்கள். இவர்களில் பலர் தமிழர்கள் என்பது தலை குனிவைத் தருகிறது.

ரிக்ஷா வாடகை மிகவும் குறைவு. மூன்று பேர்கூடச் சவாரி செய்கிறார்கள். சாலையின் இருமருங்கிலும் காய்கறி அங்காடிகள் கங்கையின் செழிப்பை விளம்பரப்படுத்துகின்றன. ஆங்கில அறிவிப்புப் பலகைகளின் மேல் தார் பூசப்பட்டிருக்கிறது. பாதையின் ஓரங்களில் திறந்த சாக்கடை, ஈக்கள், பன்றிகள், கழுதை. காலியான இடங்களிலெல்லாம் சிறு சிறு 'கோதா'க்கள். கோவணம் கட்டிய சிறுவர்கள் குஸ்தி பழகுகிறார்கள். இவர்களுக்கு மிகவும் பிரியமான உணவு முளைக்க வைத்த கொத்துக் கடலை, — வெங்காயம் பச்சை மிளகாய், எலுமிச்சம் சாறு சேர்த்தது. கைவண்டிகளில் வைத்து இதை விற்கவும் செய்கிறார்கள்.

காசி ராஜா அரண்மனை



லஹோராபீர் என்ற பெரிய சதுக்கம். பெரிய பெரிய கடைகள். ஓரத்தில் சாக்கடை சாகவதும். இடதுபுறம் வித்யாதேவி நிறுவிய அழகிய ஆலயம். சதுக்கத்தின் நடுவில் சந்திரசேகர ஆஜாதின் வெண்சிலை. ஒரு கரம் மீசையை முறுக்குகிறது. மற்றதில் கழல்

விசுவநாதர் ஆலயம் - பல்கலைக் கழகத்தில்





கங்கையிலே ஓர் ஓடம்



சந்திரசேகர ஆஜாத்-லஹோராபீர் சதுக்கம்

துப்பாக்கி. முப்புரி தரித்த அந்த உருவம் வீர உணர்ச்சியை ஊட்டுகிறது. தமிழ் நாட்டு வாஞ்சி ஐயரைப் போல் இவரும் ஒரு விடுதலைப் புரட்சிக்காரர். தமிழ் நாட்டில் அடுத்த தலைமுறையினருக்கு வாஞ்சி ஐயரை நினைவிராது போகலாம். ஆனால் காசி வாசிகள் ஆஜாதை மறக்க முடியாமல் செய்யும் இந்தச் சிலை.

கங்கையில் பற்பல ஸ்நான கட்டங்கள். பற்பல படித்துறைகள். ஆனால் தசாசுவமேத கட்டத்துக்குத்தான் சிறப்பு அதிகம். கூட்டமும் மிகுதி. ஏனெனில், அதை அடுத்துத் தான் விசுவநாதர் ஆலயத்துக்குச் செல்லும் சந்து உள்ளது. இந்தத் துறையில் நீர் மூழ்கி ஆலயத்துக்குச் செல்லும்போதுதான் தம் முன் எதிர்ப்பட்ட தீண்டாதானை ஆதிசங்கரர் விலக்கினார். பிறகு உண்மை நிலையை உணர்ந்து மனிஷா பஞ்சகம் பாடினார் என்று அறியும் போது உடல் சிலிர்க்கிறது.

'கலக்கமில் பரமானந்தமாம் மேன்மைக்
கது உறும் தூயவன் எவனோ,
புரி அணி மறையோன் ஆயினும் அன்றிப்
புலையனே ஆயினும் ஒன்றே!'

விசுவநாதர் ஆலயத்துக்குச் செல்லும் சந்து மிகவும் குறுகலானது. இருபுறமும் சிறிய உலகமே நிரம்பியிருக்கிறது. பாத்திரங்கள், பட்டாடை, பாக்கு, பால்கோவா, பொம்மைகள், மலர்கள், ஊதுவத்தி, கங்கை நீர், கண்ணாடி வளை. தொழு நோயாளர்கள் எதிர்ப்படுவார்கள். பண்டாக்கள் பின்னிருந்து தள்ளுவார்கள். மாடொன்று முட்ட வரும். மழை பெய்தாலோ எழும்பும் மணத்தைப் பற்றிக் கேட்கவே வேண்டாம்.

ஹிந்துவாகப் பிறந்த ஒவ்வொருவரும் வாழ்நாளில் ஒரு தடவையாவது கங்கையில் மூழ்கி, விசுவநாதரைத் தரிசிக்க வேண்டும் என்று விரும்புகிறார்கள். அந்த ஆலயத்துக்குச் செல்லும் பாதை இவ்வளவு தூய்மைக் குறைவாக உள்ளதே என்று வருத்தப்பட்டு எழுதியிருக்கிறார் காலஞ்சென்ற கே. எம். முன்ஷி. அவர் உத்தரப் பிரதேசத்தின் கவர்னராக இருந்தபோது கூட இந்த நிலையை மாற்ற முடியவில்லை.

ஆலயத்தின் கூரைக்கு ராஜா ரஞ்சித் சிங் பொன் தகடு வேய்ந்திருக்கிறார். சிறிய நுழைவாயில். நந்தி முன்னிட்ட சுயம்புலிங்கம். கங்கையிலிருந்து எடுத்துச் சென்ற நீரை அங்குள்ள லிங்கத்துக்கு நாமே அபிஷேகம் செய்யலாம். லிங்கத்தைத் தொட்டுக் கும்பிடலாம். ஆனால் பண்டாவுக்குக் காசு தர வேண்டும். தென்னிந்தியர்களுக்கு இந்த வழிபாட்டு முறை சற்று திகைப்பைத் தருகிறது. கருவறை இங்கு ஒன்றும் கிடையாது. மாடும் கோயிலுள் சம உரிமை கொண்டாடும். சாணி போடும், முட்ட வரும். யாரும் ஒன்றும் செய்வதில்லை.



பசுவுக்குக் காசியில் சிறப்பான இடம். நெடுஞ் சாலைகளில் எல்லாம் அவை தடையின்றி உலாவுகின்றன. காய்கறிக்காரர்களுக்கெல்லாம் பரம வைரி. அதை வேற்று மதத்தினர் விரட்டினால் சமயக் கலவரமே நிகழும். கங்கைப் படித்துறையில் அதைக் கட்டி வைத்து ஒரு கட்டுப் புல்லையும் எட்டத்தில் வைக்கிறார்கள். பத்துப் பைசா கொடுத்துப் புல்லை



# விநோத சம்பிரதாயம்



கன்னட தேசத்தில் மருமகளை முதன்முதலாக மாமியார் தன் வீட்டுக்கு அழைக்கும்பொழுது, மருமகள், சர்வாலங்கார பூஷிதையாக வீட்டுக்குள் வர வேண்டும். வீட்டு வாசற்படியில், படி நிறைய அரிசியில் மஞ்சள் கொம்பு போட்டு வைத்திருப்பார்கள். அதை மருமகள் இடது காலால் விசி இடறிக் கொண்டு வர வேண்டும். அப்படி இடறும் அரிசி வீட்டிற்குள் நாலாபுறமும் சிதற வேண்டும். நிறையச் சிதறச் செய்து வரும் பெண்ணை மிக்க மகிழ்ச்சியோடு மாமியார், வெற்றிலை பாக்குடன் எதிர்கொள்ளுவாள். அதாவது மருமகள் வீட்டுக்கு வந்த வேளை, வீடு முழுவதும் செல்வம் கொழிக்க, வீட்டில் தான்யம் நிறைய வேண்டும் என்பது அதன் உட்பொருள்.

- எம். என். சுப்புலக்ஷ்மி

---

வாங்கி அதற்குக் கொடுத்து அதன் நிறையளவு புண்ணியம் சம்பாதிக்கிறார்கள். அதன் வாலைத் தொட்டு ஒன்றேகால் ரூபாய் தட்சிணை கொடுத்துவிட்டால் கங்கைக் கரையில் கோதானம் செய்த புண்ணியம் வந்துவிடும். முன்ஷி பிரேம்சந்த் கோதானம் என்று ஒரு நவீனமே எழுதியிருக்கிறார். அவரும் அண்மையில் உள்ள லம்ஹி கிராமத்தில் பிறந்து வளர்ந்தவர்.

அடுத்து அன்னபூர்ணா ஆலயம். பெருஞ் சக்தி வாய்ந்த கோயில். அன்னைக்குத் தீபாவளித் திருநாளில் பொற்கவசம் சாத்தப்படும். அது அழகுமிக்க காட்சி. ஆனால் தூய்மைக்கும் கோயிலுக்கும் தொடர்பில்லை. அங்கே தொங்கும் தமிழ் அறிவிப்புப் பலகை நம்மைத் தலை குனிய வைக்கிறது. இவ்வளவு சொற் குற்றமா? இங்கே பல்கலைக் கழகத்திலேயே தமிழ்ப் பிரிவு இருக்கிறதே !

உத்தரப் பிரதேச நகரங்களில் எக்கா என்று ஒரு வண்டி உண்டு. சதுரமான கட்டை மணை. அதற்கு இரண்டு சக்கரங்கள். நிழல்தர மரக் கூண்டு. அதில் செல்ல விரும்புபவர்கள் நவக்கிரகங்களைப் போல் உட்கார வேண்டும். வண்டியிலிருந்து கீழே விழாமல் சவாரி செய்வது பெரு வியப்பு. காசியில் அதற்கு ஒரு தனி உபயோகம். கட்டை மணையின் பின்புறத்தில் மூங்கில் பாடை. மணையின் மேல் உறவினர்கள். வண்டி திரிபுர பைரவி கட்டத்துக்குப் போகும். இங்குதான் அரிச்சந்திரனே காவல் காத்தானாம். நாள் முழுதும் மயானத்தில் தீப்புகை. க்யூ வரிசையில் பற்பல பாடைகள். காசிக்கே மகா ச்மசானம் என்று ஒரு பெயருண்டு. இங்கே இறந்தால் முக்தி என்றொரு நம்பிக்கை. அதனால் மரிப்பதற்கென்றே பலர் இங்கு வந்து தங்குகிறார்கள்.

தசாசுவமேதப் படித்துறையில் பற்பல நீண்ட சதுரப் பலகைகளின் மேல் பூஜைப் பெட்டியுடன் பண்டா உட்கார்ந்திருப்பார். அவருக்கு நிழல் தர அகலமான தாழங் குடைகள். குளிக்க வரும் யாத்திரீகர்களுக்கெல்லாம் சங்கல்பம் செய்து வைப்பது இவர்கள் தொழில். அங்கு இன்றையக் கவர்ச்சிப் பொருள் ஹிப்பி, ஹிப்பிமாமி. தட்டாடை வேட்டியும், ஜுப்பாவும், ஜபமாலையும் தரித்திருக்கும் ஹிப்பியின் ஒரு கையில் இருப்பது பீடி. மற்றதில் கேனோபநிஷத விரிவுரை. பரிதாபமான காட்சி. அவர்களைப் பண்டாக்கள் சுற்றி வருகிறார்கள். ''ஸார்! ஃபோர் அனஸ் மே ஃபைவ் டெம்பிள் ஷோயிங்'' என்ற கூவல்.

கேதார கட்டத்தில் உள்ள குமாரசாமி மடம் இன்னொரு சிறப்பிடம். குமரகுருபரர் பெயரிலேயே படித்துறையும் உண்டு. ஊமையாகப் பிறந்து திருவருட் பயனால் வாக்குப் பெற்ற அந்தப் பெருமகன் இந்தி மொழியில் ஆற்றிய கம்ப ராமாயணப் பேருரைகள் துளசிதாசரையும் ஈர்த்தன. கம்பனின் நிழலைத் துளசியிலும் காணலாம் என்று பன்மொழிப் பண்டிதர்கள் கூறுவார்கள். அவர் இந்நகரில் பல அதிசயங்களைப் புரிந்திருக்கிறார். எல்லாவற்றுக்கும் மேலாக இங்கு வரும் யாத்திரீகர்களுக்கு இலவச உணவு அளிக்க ஏற்பாடு செய்திருக்கிறார். எத்தனை பேர் வந்தாலும் இல்லையெனாமல் உணவு அளிக்கும் திருத் தொண்டைத் திருப்பனந்தாள் மடம் தொடர்ந்து செய்து வருகிறது. அங்கு பணிபுரியும் ஊழியர்கள் இரப்பவர்களிடம் காட்டும் பரிவு, அன்பு, இன்முகம் ஆகியவை தமிழனைத் தலைநிமிர வைக்கின்றன. அவர்களிடம் உரையாடுவதே தனி இன்பம்.

கங்கைக் கரையோரமாகப் பெரிய கடைத்தெரு. நூறு ரூபாயிலிருந்து ஆயிரம் ரூபாய்க்கும் அதிகம் விலைமதிப்புள்ள பட்டாடைகள். இந்தத் தொழிலில் பல தலைமுறையாக ஈடுபட்டிருப்பவர்கள் முஸ்லிம்கள். பட்டு, இத்தாலி, ஹாங்காங், ஜப்பான் ஆகிய இடங்களிலிருந்து வருகிறது. வட இந்தியாவில் திருமண விழாக்களுக்குக் காசிப் பட்டுச் சேலை ஒரு முக்கியமான அம்சம். காசியைச் சுற்றிய கிராமங்களில் எல்லாம் கைக்கோளர்கள் மிக அதிகம். அவர்களில் ஒருவர் மகாத்மா கபீர்.

அவர் நெய்த சொல்லாடைகள் ஒரு லட்சத்துக்கும் அதிகம். இந்திய இலக்கியமே கபீரைப் பற்றிப் பெருமைப் படலாம். அவர் பாபா நானக்கின் சம காலத்தவர். சுவாமி ராமானந்தரின் சீடர். ராமானந்தரோ விசிஷ்டாத்வைதியான இராமானுஜரின் வழி வந்தவர்.

காசி நகர் குறித்துத் தமிழ் மொழியில் பல கவிதை நூல்கள் உள. குமர குருபரர் காசிக்

கலம்பகம் எழுதினர். அதிவீர ராம பாண்டியர் காசி காண்டம் இயற்றியுள்ளார். அண்மையில் மகா வித்வான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை யவர்கள் காசி இரகசியம் என்ற தல வரலாறு எழுதியிருக்கிறார். காசித்துண்டி விநாயகர் திருவருட்பா என்றொரு பழைய நூலும் உண்டு.



குமாரி வசந்தி மணியின் பரதநாட்டிய அரங்கேற்றம் அண்மையில் திருநெல்வேலியில், நெல்லை சங்கீத சபா ஆதரவில் சிறப்பாக நடைபெற்றது. குமாரி வசந்தி, திரு கே. ஆர். ராதாகிருஷ்ணனின் சிஷ்யை; தன்பாதில் பேராசிரியராகப் பணியாற்றும் திரு ஜி. எஸ். மணியின் புதல்வி. குமாரி வசந்தியின் கலை ஆர்வம் வளர வாழ்த்துகிறோம்.

இந்தி மொழியின் பேரிலக்கியம் இங்கே பிறந்தது. கோஸ்வாமி துளசிதாஸர் இந் நகரவாசி. வடஇந்திய இந்துக்கள் ஒவ்வொருவர் வீட்டிலும் அவர் எழுதிய 'ராம சரித்திர மானஸ்' இருக்கும். அதிகக் கல்வி அறிவில்லாதவன்கூட அந்த நூலைப் புனிதம் மிக்கதாகக் கருதுகிறான். தமிழ் நாட்டில் கம்பனின் நிலை என்ன?

'மானச மந்திர்' என்ற பெயரில் ஒரு சலவைக் கல் கோயிலையே எழுப்பி அதனுள் துளசியின் கவிதை முழுவதையும் செதுக்கி வைத்திருக்கிறார்கள். சித்திரமாகவும் வரைந்துள்ளார்கள்.

ராம சரிதம் மக்களின் மனத்தை எந்த அளவுக்குக் கவர்ந்துள்ளது என்று அறியக் கங்கையின் அக்கரைக்குச் செல்ல வேண்டும். அந்த ஊருக்குப் பெயரே ராம நகரம். அங்கேதான் காசி ராஜா வசிக்கிறார். இந்தப் பிரதேசம் முன்னுளைய சமஸ்தானமாக இருந்தது. இதன் மன்னர்களையும் மக்களையும் இராம காதை பக்தி வெறி கொள்ளச் செய்திருக்கிறது.

ஊரின் தென் பகுதியில் அழகிய துர்க்கையின் ஆலயம். அதை எதிர்த்துப் பாற்கடல் என்ற திருக்குளம். அதைத்தான் இறைவன் பள்ளி கொள்ளும் பாற்கடலாகக் கற்பனை செய்து கொள்ளுகிறார்கள். துளசியின் இராம காதை அந்த இடத்தில்தான் தொடங்குகிறது. யானையின் மேல் அமர்ந்து மகாராஜா படிக்கத் தொடங்குவார். தொடர்ந்து பலர் அந்த நூலைப் படிப்பார்கள். ஊர்வலம் ஒவ்வோர் இடமாகச் செல்லும். அயோத்தி, மிதிலை, இராமன் ஆற்றைக் கடப்பது, — அதற்காக ஒரு செயற்கை ஆறே சிருஷ்டி செய்யப் பட்டிருக்கிறது — சித்திர கூடம், பரத்வாஜ ஆசிரமம், நந்திக் கிராமம் இலங்கை, அசோக வனம் என்று ஊரின் பல பகுதிகள் நிரந்தரமாக இதே பெயர்களுடன் விளங்குகின்றன. அசோக மரங்கள் வளர்க்கப்பட்டுள்ளன — இலங்கையில். நவராத்திரியின் கடைசி நாளன்று இராம — ராவண யுத்தம் நிகழும். பல குடும்ப உறுப்பினர்கள் இதற்காகப் பல பரம்பரைகளாக இந்த வேடங்களைத் தரிக்கின்றனர். இதற்கான செலவு முழுதும் மன்னருடைய மானியத்திலிருந்து தரப்படுகிறது. நவராத்திரி நாட்கள் முழுவதும் மக்கள் தெய்வ வெறி கொண்டு நடக்கின்றனர்.

ஊரின் பழுதடைந்த பகுதியில் லால் பஹாதூர் சாஸ்திரியின் வீடு இருக்கிறது. மிகச் சிறிய இல்லம். — அவருடைய உருவத்தைப் போல. தினமும் அவர் ஆற்றைக் கடந்து எதிர்க் கரையில் கல்வி பயிலச் செல்வது வழக்கமாம். இராம நகரத்தில் வாழ்ந்த காரணத்தினால்தான் அவருக்கு உண்மையிலும் ஒழுக்கத்திலும் இத்தகைய பற்றுதல் ஏற்பட்டதோ!

சங்கட மோசன் ஹனுமான் காசி நகரின் கண்கண்ட தெய்வம். செவ்வாய், சனிக் கிழமை மாலை வேளைகளில் இங்கு செல்பவர்கள் மிதிபடாமல் திரும்ப முடியாது. துளசிதாசர் இந்த இடத்தில் இராம காதையை அரங்கேற்றியதாகவும், அந்த மகா பக்த ஹனுமான் இங்கேயே நின்று காவியத்தைச் செவிமடுத்ததாகவும் வரலாறு. கேட்ட வரம் தருபவர் என்று இந்த ஹனுமானிடம் மக்களுக்குப் பரம பக்தி. நம்பிக்கைதானே ஒரு சமுதாயத்துக்கு ஆதாரம்! இந்தக் கோயிலைத் தரிசிக்காமல் காசி யாத்திரை பூர்த்தியானதாகக் கருதப்படுவதில்லை.

சங்கடமோசன் ஆலயத்தைக் கடந்து சென்றால் பனாரஸ் இந்து பல்கலைக் கழகம். அதன் முகப்பு வாயிலில் பண்டித மதன் மோகன் மாளவியாவின் சிலை கம்பீரமாக நிற்கிறது. இந்தப் பல்கலைக் கழகத்தை உருவாக்க அவர் உழைத்ததற்கு அளவே யில்லை. எல்லோரையும் அண்டினார், தண்டினார். பிச்சைக்கார மன்னர் என்றே இவரைக் குறிப்பிடுவார்கள். இவருடைய முயற்சியினால் இன்று ஆயிரக் கணக்கான மாணவர்கள் அறிவுக் கண் பெற்று விளங்குகிறார்கள். பல்கலைக் கழகம் எளிமையும், இனிமையும் சூழ்ந்த ஆசிரமத்தைப் போல் விளங்குகிறது.

பிரும்மஞான சபை இயக்கத்துக்கு (தியசாபிகல் — சொஸைட்டி) அடித் தூண்களாகிய ஆல்காட், அன்னிபெஸண்ட், பாபா பகவான் தாஸ் (முன்னாள் சென்னை கவர்னர் ஸ்ரீ பிரகாசாவின் தந்தை) ஆகியோர் நெடுங்காலம் காசியில் வாழ்ந்தவர்கள். அவர்களும் இந்தப் பல்கலைக் கழக வளர்ச்சிக்குப் பெரும் உதவி புரிந்தார்கள். ஹிந்து உயர்நிலைப் பள்ளியில் உள்ள அன்னிபெசன்டின் உருவம் நம்மைப் பழைய நாட்களுக்கு இட்டேகுகிறது. பரம வேதாந்தி ஜிட்டு கிருஷ்ணமூர்த்தியின் கொள்கையில் பற்றுள்ளவர்கள் இங்கு பலர்.

அதற்காக ஒரு கேந்திரமும் இங்கு இயங்கி வருகிறது.

பல்கலைக் கழகத்தினுள் பிர்லா குடும்பத்தினர் ஒரு விசுவநாதர் ஆலயத்தை நிறுவியிருக்கிறார்கள். ஒரு நல்ல கோயில் எப்படி விளங்க வேண்டும் என்பதற்கு இது ஒரு மாதிரி. கோயில் என்றால் தூய்மை, முருகு, அறிவு என்று இந்த ஆலயம் வலியுறுத்துகிறது. காசிப் பண்டாக்கள் இதைத் தரிசித்ததுண்டா என்று தெரியாது.

காசியைப் பற்றிக் கூறும்போது வித்யா பீடத்தை மறந்துவிட முடியாது. விடுதலை இயக்கத்தின் பெருந் தலைவர்களையெல்லாம் தன்னில் சார்த்தது இந்த வித்யாபீடம். ஜப்பானில் அளிக்கப்பெறும் தேசியக் கல்வியைப் போல் பாரத நாட்டிலும் அளிக்க வேண்டும் என்ற கருத்துடன் ஸ்ரீ சிவப்பிரசாத் குப்தா தமது வாழ்வையும், செல்வத்தையும் இந்த நிலையத்துக்கு ஈந்தார். அண்ணல் காந்தியடிகள் இதற்கு அடிக்கல் நாட்டினார். பாபா பகவான் தாஸ், மோதிலால் நேரு, ஆசாரிய நரேந்திர தேவ், ஸ்ரீ ஸ்ரீ பிரகாசா, டாக்டர் சம்பூர்ணானந்த் ஆகியோர் இதனுடன் தொடர்பு கொண்டார்கள். மிக உயர்ந்த குறிக்கோள்களை இலக்காகக் கொண்ட இந்த நிறுவனம் இன்றிருக்கும் நிலையைக் குறித்து வருந்தி அண்மையில் ஸ்ரீ பிரகாசா ஒரு கட்டுரை எழுதியிருந்தார். சமயமோ, கல்வியோ, அவற்றுடன் தொடர்பு கொண்டவர்களின் தவ வாழ்வினால்தான் நிலைத்து நிற்கிறது என்பதற்கு இந்த ஸ்தாபனம் ஓர் எடுத்துக்காட்டு.

பனாரஸ் பீடா புகழ் மிக்கது. ஐந்து ரூபாயிலிருந்து ஐந்நூறு ரூபாய் வரை விலையுள்ள பீடா வகைகள் இங்குண்டு. அவ்வளவு விலையுள்ள தாம்பூலம் தரித்துக் கொண்டு அந்த நாளைய பிரபுக்கள் தால் மண்டிக்குப் போவார்கள். தால் மண்டி வாராணசியின் செவ்விளக்குப் பிராந்தியம். அங்கே இசையும் கலையும் வளர்ந்தன.

தென்னிந்தியர்களுக்கு, சிறப்பாகத் தமிழர்களுக்கு ஹனுமான் கட்டம் ஒரு முக்கியமான இடம். எல்லா வைதிகக் காரியங்களுக்கும் துணை புரியக் கூடிய வேதியர்கள் பலர் இங்கு குடியிருக்கிறார்கள். சில தலைமுறைகளாகவே இங்கு வாழ்கிறார்கள். வைதிக காரியங்களைச் சிரத்தையுடன் செய்து வைக்க வேண்டும் என்ற உண்மையான ஆர்வம் இவர்களிடம் உள்ளது. மற்ற படித்துறைகளில் நாம் காணும் பண்டாக்களையும் இவர்களையும் ஒப்பிட்டுக் காணும்போதுதான் தமிழ்ப் பிரிவினரின் சிறப்பியல்பு புலப்படும். காஞ்சிப் பெரியவர்கள் ஆதரவில் தழைக்கும் மடம் ஒன்று யாத்திரீகர்களுக்கு உதவி புரிகிறது. தென்னிந்திய ஆகம, சிற்ப முறையிலும் இந்தக் கட்டத்தில் கோயில் ஒன்று உருவாகிக் கொண்டிருக்கிறது.

காசிக்குச் செல்பவர்கள் கபால பைரவரைத் தரிசிக்காமல் வரக் கூடாது. அங்கு சென்று பிராகாரத்தில் விற்கும் கறுப்புக் கயிறுகளை வாங்கிக் கருவறைக்குள் நுழைந்து அதைக் கபால பைரவரின் தோளில் இட்டு எடுத்து மணிக்கட்டில் கட்டிக் கொள்வது தொன்று தொட்டு நிகழும் ஒரு வழக்கம். யாத்திரை புரிந்தவர்கள் அந்தக் கயிறுகளைத் தம் ஊருக்கு வந்து விநியோகிப்பதுமுண்டு. கபால பைரவர் கோயிலை அடுத்து நகரத்தின் மிகப் பெரிய பட்டுச் சந்தை இருக்கிறது. மாலை வேளைகளில் இந்தக் கடைகளின் எதிரே கைக்கோளர்கள் தேனடை ஈக்களைப் போல் நிற்கிறார்கள். அவர்கள் ஏந்தியிருக்கும் துகில்களில் உள்ள ஜரிகைகளின் வேலைப்பாடு, நிறக் கலவை ஆகியவை வர்ணனைக்கு அடங்காதவை. காண்பவர்களின் உள்ளத்தில் கவிதை உணர்ச்சி எழச் செய்கிறது. ஆனால் அவர்களுடைய முகத்தில் எழுதியிருப்பது அன்றைய வேலையின் கூலி. துயரமும் ஏழைமையும் கப்பியிருக்கும் கண்கள். அதுதான் மனித வாழ்க்கை. எல்லாக் கலைகளும் சாண் வயிற்றை நிரப்புவதற்குத்தானோ என்ற ஏக்க உணர்ச்சி மேலிட்டு நிற்கிறது.

வெளி நாடுகளிலிருந்து தினமும் இங்கு யாத்திரீகர்கள் வந்து திரும்பும் காரணத்தினால் அரசாங்கத்தின் சுற்றுலாப் பிரிவு இங்கு இயங்குகிறது. நியாயமான கட்டணத்தில் நகரத்தின் பல பகுதிகளையும் சுற்றிப் பார்க்க இது வகை செய்கிறது. இந்த நிறுவனத்தைச் சுற்றிலும் மேல்நாட்டினரின் தேவைகளுக்கேற்ற ஹோட்டல்கள் பலவும் உள்ளன.

மக்களின் மன அழுக்கையெல்லாம் களைந்து தூய்மைப்படுத்தும் கங்கை ஆறு. தன்னிடம் வந்தவர்களின் பாவத்தையெல்லாம் போக்கும் காசி. அந்த மகா ச்மசானத்தில் எரிவதற்காகக் காத்துக் கொண்டிருக்கும் பிணங்களைத் தொடர்ந்தாற் போல் பத்து நிமிஷங்கள் பார்த்துக் கொண்டிருந்தால் போதுமே, அது நெஞ்சிலுள்ள பாவத்தையெல்லாம் பொசுக்கி விடுமே! மனிதனை நேர் வழியில் நிலைபெறச் செய்வதற்கு மரண பயத்தைப் போன்ற சிறந்த துணைவன் வேறு இல்லை என்று மகாராஷ்டிர ஞானியான ஏகநாதர் எழுதியிருக்கிறார்.

ஐயமுள்ளவர்கள் சென்று பார்க்கட்டும், அரிச்சந்திரன் காவல் காத்த படித்துறையை!

---

திரு அண்ணாதுரையின் சமாதிக் கல்லில் ஓர் அவசரத் திருத்தம் செய்ய வேண்டும். அன்னாரு காலமான தேதியைக் கல்லிலிருந்து அழித்துவிட்டு அதற்குப் பதில் தமிழ் நாட்டில் மதுவிலக்கு ரத்தாகும் தேதியைப் பொறிக்க வேண்டும். அண்ணாவின் முக்கியமான கொள்கைக்குச் சமாதி எழுப்பப்படும் தினம் அதுவே அல்லவா!



## திருத்தப் பிரேரணை

கருத்து: சத்திய கங்கை

இப்போது மட்டுமென்ன? 1940-ல் இரண்டாம் உலகப் போர் நடந்து கொண்டிருந்த காலத்திலேயே பர்மாவிலிருந்து அகதிகளாக வந்தவர்கள் பலர்.

1942ல் இந்தியாவுக்கு வந்த பர்மா அகதிகளில், ஸ்ரீமதி ஓஹைரா குடும்பமும் ஒன்று. ஆங்கிலோ — இந்திய வகுப்பைச் சேர்ந்த குடும்பம்.

''பர்மா அகதியாகச் சென்னைக்கு வந்ததும் நர்ஸ் பயிற்சி பெற்றீர்களா?'' கேள்வி.

''இல்லை. பர்மாவிலேயே படிப்பை முடித்துக்கொண்டு, அங்கேயே நர்ஸ் டிரெயினிங்கில் சேர்ந்தேன். சென்னை வந்ததும் ஒரு தனியார் நர்ஸிங் ஹோமில் இரண்டு வருடங்கள் பணி புரிந்தேன்.''

''பிறகு?''

''சென்னையை விட்டு உதகமண்டலம் செல்ல நேர்ந்தது. உதகைக்குச் சில மைல்கள் தள்ளி நிறுவப்பட்டிருக்கும் 'லாரன்ஸ் மெமோரியல்' — ராணுவப் பள்ளியின் மருத்துவ நிலையத்தில், 1945 முதல் 1948 வரையில் நான்காண்டுகள் இருந்தேன். பின்னர், சென்னை வந்து விட்டேன். அது முதல் சென்னையில்தான்!......''

அடிக்கடி பங்களாவுக்கு வந்து பார்த்துக் கொண்டிருந்தார். நர்சாக என்னை அமர்த்தி இருந்தார்கள். அந்த நோயாளி என்னைப் பார்க்கும் போதெல்லாம் கையில் அகப்பட்ட சாமான்களை வீசி எறிவார்!.... சில சமயம் பாதரட்சைகள்கூடப் பறந்து வரும்! எல்லாவற்றையும் பொறுமையாக ஏற்றுக் கொண்டேன்!'' என்கிறார் சிரித்துக் கொண்டே.

''மன நோய் கண்டவர்கள் மட்டுமல்ல; மற்றவர்களும்கூட நோய் கடுமையாக இருக்கும்போது தாறுமாறாக நடந்து கொள்வார்கள்; கடுமையாகப் பேசுவார்கள். ஆயினும், இன்முகத்துடன், நோயின் கடுமையைக் குறைக்க மருந்து கொடுத்து, பொறுமையைக் கடைப்பிடிக்க வேண்டும். இதற்காகத்தான் நர்சுகளுக்கு முக்கியமாகப் பயிற்சி கொடுக்கப்படுகிறது'' எனவும் கூறுகிறார்.

நர்சாகவும், மேட்ரனாகவும் பணிபுரிந்த பிறகு, இன்று 'நர்ஸஸ் அசோசியேஷன்' (Nurses Association) காரியதரிசியாக இருந்து வருகிறார்.

இந்தச் சங்கத்தில், எழுபத்தெட்டு அங்கத்தினர்கள் இருக்கிறார்கள்.

சென்னையில் உள்ள பிரபல டாக்டர்களால் நடத்தப்படும் நர்சிங்ஹோம்களுக்கும், தனி நபர்களின் இல்லங்களுக்கும் நர்ஸ்கள்



# சீற்றத்தைக் கண்டும் சிரிப்பவர்!

ஆயிரத்தைக் கண்டவர்




இருபத்தெட்டு வருடங்கள் நகரிலுள்ள டாக்டர்கள் நடத்தி வரும் நர்சிங் ஹோம்களிலும், செல்வந்தர்களின் வீடுகளிலும் நோயாளிகளுக்குப் பணிவிடை செய்து வந்திருப்பவர் ஸ்ரீமதி ஓஹைரா.

மகப்பேறு காலத்தில் ஆஸ்பத்திரிக்குச் செல்லாமல், இல்லத்திலேயே பிரசவம் நடைபெறும் போது (Midwife) மருத்துவச்சியாகவும் இருந்திருக்கிறார்.

இவரது நர்ஸ் பணிவிடை எட்டாயிரத்துக்கும் மேற்பட்ட நோயாளிகளுக்கு நடந்திருக்கிறது. தவிர, ஓராயிரத்துக்கும் மேற்பட்ட தாய்மார்களின் பிரசவத்துக்கும் உதவி புரிந்துள்ளார்! ஆமாம், ஓராயிரம் பிறப்பைக் கண்டவர்!

'பிரசவம் என்பது பெண்களுக்கு மறுபிறவி போல்' என்பார்கள். அப்படிப் பார்த்தால் ஆயிரம் மறுபிறவிகளைக் கண்டவர் எனலாம்!

''நர்ஸாக இருக்கும்போது ஏற்பட்ட அநுபவங்கள் ஏராளமாக இருக்குமே....?''

''எத்தனையோ அநுபவங்கள்! ஒன்றை மட்டும் சொல்கிறேன், நர்ஸ் பணி எவ்வளவு சிரமமானது என்பதை விளக்க.

''ஒரு பெரிய மனிதர் வீட்டுப் பிள்ளை. மன நோயால் பாதிக்கப்பட்டு, டாக்டர்

தேவைப்பட்டால் இந்தச் சங்கத்துக்கு ஃபோன் செய்தால் போதும். உடனே நர்ஸ்களை அனுப்புவார்கள்.

ஒரு நர்ஸுக்கு இந்தச் சங்கம் இருபத்தைந்து ரூபாய் கட்டணம் வசூலிக்கிறது ஒரு நாளைக்கு.

வேப்பேரிக்குச் செல்லும் ரண்டல்ஸ் ரோட்டிலுள்ள இச்சங்கம், அண்மையில் 'கேக்' வெட்டி பொன்விழா கொண்டாடியது. அப்போது தயாரான கேக்கின் மேல் அழகிய நர்ஸ் பொம்மை நின்றது. (படம்)

சங்கத்தின் தலைவராக இருப்பவர் டாக்டர் கே. சௌரிராஜன். **பேட்டி: ஏ. சுவாமிநாதன்**

# பொன்னியின் செல்வன்

அமரர் கல்கி

நாற்பத்திமூன்றும் அத்தியாயம்

## மீண்டும் கொள்ளிடக்கரை

**கொ**ள்ளிடத்தின் வடகரையிலுள்ள திருநாரையூர் என்னும் கிராமத்தில் நம்பியாண்டார் நம்பி என்னும் சைவப் பெரியாரின் மடாலயம் இருந்தது. அதன் வாசலில் அரண்மனைப் பல்லக்கு ஒன்றும் பல்லக்குத் தூக்கிகளும் காவல் வீரர்களும் நின்றனர். இவர்களைத் தவிர கிராமவாசிகள் சிறிது தூரத்தில் கூட்டம் கூடி நின்றார்கள். அந்தக் கூட்டத்துக்கு மத்தியில் இரண்டு பேருக்குள் ஏதோ கடுமையான விவாதம் நடந்தது போலவும், அதை அக் கூட்டத்தார் உற்சாகத்துடன் கவனித்துக் கொண்டு வந்ததாகவும் தோன்றியது.

ஜனக் கூட்டத்தைச் சற்று விலக்கிக் கொண்டு உள்ளே எட்டிப் பார்த்தோமானால், நமக்கு முன்னே பழக்கமான இருவர்தான் அங்கே நின்று சண்டையிட்டுக் கொண்டிருக்கிறார்கள் என்பது தெரிய வரும். அவர்களில் ஒருவன் திருமலை என்ற ஆழ்வார்க்கடியான் நம்பி, மற்றொருவர் நம் கதையின் ஆரம்பத்திலேயே அவனுடன் படகில் விவாதம் தொடுத்த வீர சைவர்; நம்பியாண்டார் நம்பியின் சைவ மடாலயத்தில் பிரதான காரியக்காரர்.

நம்பியாண்டாரைப் பார்ப்பதற்காக வந்திருந்த பெரிய பிராட்டி செம்பியன்மாதேவி அந்த மகானுடனே ஏதோ தனிமையில் பேச விரும்புகிறார் என்பதை அறிந்து கொண்டதும் மேற்கூறிய வீரசைவப் பெரியார் வெளியேறி வந்தார். ஆழ்வார்க்கடியானைப் பார்த்ததும் அவருக்கு இயற்கையாகவே ஆத்திரம் பொங்கி வந்தது. முன்னொரு தடவை அந்த வீர வைஷ்ணவ சிகாமணியிடம் விவாதத்தில் தோல்வி அடைந்து விட்டோம் என்கிற எண்ணம் அந்த ஆத்திரத்தை மூட்டியது.

"அடே! நாமத்தைப் போட்டு ஊரை ஏமாற்றும் வேஷதாரி வைஷ்ணவனே! இங்கே எங்கு வந்தாய்? எங்கேயாவது பொங்கல்—புளியோதரை கிடைக்குமிடம் பார்த்துக் கொண்டு போவதுதானே?" என்றார்.

"பொங்கல் புளியோதரை வேண்டிய மட்டும் சாப்பிட்டு விட்டுத்தான் வருகிறேன். இங்கேயுள்ள சைவ மடத்தில் நீங்கள்



எல்லாரும் சாம்பலைத் தின்று உடம்பு வீங்கிப் போய்க் கிடக்கிறீர்கள் என்று அறிந்து வந்தேன். பாவம்! நீங்கள் என்ன செய்வீர்கள்! உங்கள் சிவபெருமான் சாப்பிட அன்னம் கிடைக்காத காரணத்தினால்தானே விஷத்தை உண்டார்? அப்போது மட்டும் எங்கள் நாராயணமூர்த்தியின் சகோதரி பார்வதி கழுத்தைப் பிடிக்காமலிருந்திருந்தால் உங்கள் சிவனுடைய கதி யாதாகியிருக்கும்?'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

''அடே வீர வைஷ்ணவனே! நிறுத்து உன் கதையை! உயர உயரப் பறக்காதே! உங்கள் பெருமாள் உயர உயரப் பறந்தும் எங்கள் சிவபெருமானுடைய முடியைக் காண முடியாமல் திரும்பி வந்தாரில்லையா?''

''அது என்னய்யா கதை? எங்கள் மகாவிஷ்ணு வாமனாவதாரம் எடுத்து வந்து பூமியை ஒரு அடியினாலும் வானத்தை இன்னொரு அடியினாலும் அளந்தபோது உங்கள் சிவனுடைய முடி அந்த அடிக்குக் கீழேதானே இருந்திருக்க வேண்டும்?'' என்றான் ஆழ்வார்க்கடியான்.



''உங்கள் மகா விஷ்ணு பத்துத் தடவை பூலோகத்தில் பிறந்ததிலிருந்தே அவருடைய வண்டவாளம் வெளியாகவில்லையா? அதிலும் எப்படிப்பட்ட பிறவிகள்? மீனாகவும் ஆமையாகவும் பிறந்தாரே?'' என்றார் வீர சைவர்.

''உமக்குத் தெரிந்தது அவ்வளவுதான்! பகவான் மீனாகப் பிறந்தது எதற்காக? கடலில் மூழ்கிப் போன நாலு வேதங்களையும் திருப்பிக்கொண்டு வருவதற்கல்லவோ? ஆகையினாலேதான் எங்கள் ஆழ்வாரும்,

**'ஆனாத செல்வத்து**
**அரம்பையர்கள் தற்சூழ**
**வானாளும் செல்வமும்**
**மண்ணரசும் யான் வேண்டேன்**
**தேனார் பூஞ்சோலை**
**திருவேங்கடச் சுனையில்**
**மீனாய்ப் பிறக்கும்**
**தவமுடையே னாவேனே!'**

என்று பாடியிருக்கிறார்...!''

''அப்பனே! உங்கள் ஆழ்வார்கள் பன்னிரண்டு பேர் தான்! எங்கள் நாயன்மார்கள் அறுபத்து மூன்று பேர்! அதை ஞாபகம் வைத்துக்கொள்!''

''ஓகோ! இப்படி வேறே ஒரு பெருமையா? பஞ்சபாண்டவர்கள் ஐந்து பேர்தான்; துரியோதனாதியர் நூறுபேர் என்று பெருமை யடித்துக்கொள்வீர் போலிருக்கிறதே!''

''அதிகப் பிரசங்கி! எங்கள் நாயன்மார்களைத் துரியோதனன் கூட்டத்தோடு ஒப்பிடுகிறாயா? உங்கள் ஆழ்வார்களிலேதான் பேயாழ்வார், பூதத்தாழ்வார் எல்லாரும் உண்டு.''

''உங்கள் சிவபெருமானுடைய கணங்களே பூத கணங்கள்தாமே? அதை மறந்து விட்டீராங்காணும்?...''

இப்படி வீர வைஷ்ணவரும் வீர சைவரும் வாதப் போர் நடத்திக் கொண்டிருந்தபோது இரு தரப்பிலும் சிரத்தையுள்ளவர்கள் இடையிடையே ஆரவாரித்து உற்சாகப்படுத்திக்கொண்டிருந்தார்கள். இச் சமயத்தில் மடாலயத்துக்குள்ளிருந்து சிவஞான கண்டராதித்தரின் திருத் தேவியான செம்பியன்மாதேவியும் அவரை வழியனுப்புவதற்காக நம்பியாண்டார் நம்பியும் வெளியே வருவதைக் கண்டு, அக் கூட்டத்தில் நிச்சப்தம் நிலவியது.

மழவரையன் மகளார் நம்பியாண்டாரிடம் விடைபெற்றுக் கொண்டு வந்து ஆழ்வார்க்கடியானைப் பார்த்து, ''திருமலை! இங்கேகூட உன் சண்டையை ஆரம்பித்து விட்டாயா?'' என்றார்.

''இல்லை தேவி! நாங்கள் மற்போர் நடத்தவில்லை; சொற்போர்தான் நடத்தினோம். இந்த வீர சைவ சிகாமணிதான் முதலிலே போரை ஆரம்பித்தார். எங்கள் சொற்போர் இங்கே கூடியிருப்பவர்களுக் கெல்லாம் மிக்க உற்சாகத்தை அளித்தது. அதனாலேதான் மடாலயத்துக்குள்ளே பிரவேசியாமல் இருந்தார்கள்'' என்றான் திருமலை.

''அப்பனே! தெய்வங்களுக்குள்ளே உயர்வு, தாழ்வு சொல்லி வேடிக்கையாகக்கூட விவாதம் செய்யக் கூடாது. அதனால் சாதாரண ஜனங்களின் உள்ளம் குழப்பத்துக்கு உள்ளாகும்! என் மாமனாராகிய பராந்தக தேவர் தில்லை சிற்றம்பலத்துக்குப் பொற் கூரை வேய்ந்தார். அம்மாதிரியே வீர நாராயண புரத்தில் உள்ள அனந்தீசுவரர் கோயிலுக்கும் திருப்பணி செய்து மான்யம் அளித்தார். அவர் காட்டிய வழியிலேயே நாம் அனைவரும் நடக்க வேண்டும்!'' என்று கூறினார் செம்பியன்மாதேவி.

பின்னர், தேவியார் சிவிகையில் ஏறிக்கொள்ளவும், சிவிகை மேற்கு நோக்கிச் சென்றது. காவற்காரர்கள் முன்னும் பின்னும் தொடர்ந்தனர். ஆழ்வார்க்கடியான் செம்பியன்மா தேவியின் சிவிகைக்குச் சமீபமாக நடந்து சென்றான்.

சிறிது தூரம் சிவிகை போன பிறகு ஆழ்வார்க்கடியான் பெரிய பிராட்டியைப் பார்த்து, ''தேவி! நம்பியாண்டாரை நம்பி வந்த காரியம் என்ன ஆயிற்று?'' என்று கேட்டான்.

''என் மனம் கலக்கம் நீங்கித் தெளிவு அடைந்து விட்டது திருமலை! மதுராந்தகன் சிங்காதனம் ஏறுவதை வேறு வழியில் தடுக்க முடியா விட்டால் உலகம் அறிய உண்மையைச் சொல்லிவிடுவதே முறை என்று நம்பி ஆண்டார் சொல்லிவிட்டார். நானும் அதை மனப்பூர்வமாக ஒப்புக் கொண்டு உறுதி அடைந்து விட்டேன்!'' என்றார் செம்பியன்மா தேவி.

''நம்பியாண்டார் அவ்விதம் கூறுவார் என்றுதான் முதன் மந்திரியும் எதிர்பார்த்தார். ஆயினும் தாங்கள் இந்தப் பிரயாணம் வந்தது மிக நல்லதாய்ப் போயிற்று, தாயே! தாங்கள் இவ்விஷயமாக உடனே முடிவு செய்வதற்கு இன்னும் அதிகமான அவசியம் நேர்ந்திருக்கிறது. கடம்பூரிலிருந்து மிக பயங்கரமான செய்தி வந்திருக்கிறது. அது இன்னும் இந்த ஊரில் உள்ளவர்களுக்குத் தெரியாது. தெரிந்தால் இங்கு ஒருவரும் இருந்திருக்க மாட்டார்கள்.

எல்லோரும் இளவரசரின் இறுதி ஊர் வலத்தைப் பார்க்கப் போயிருப் பார்கள்!'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

''திருமலை! இது என்ன சொல்லு கிறாய்? என்ன பயங்கரமான வார்த்தை! எந்த இளவரசர்? என்ன இறுதி ஊர் வலம்?'' என்று தேவி கேட்டார்.

''மன்னிக்க வேண்டும், தாயே! சோழ குலத்தில் இதுவரை இம்மாதிரி துர்ச்சம்பவம் நடந்ததில்லை. கடம்பூர் அரண்மனையில் ஆதித்த கரிகாலர் கால மானார். துர்மரணம் என்று சொல் கிறார்கள். யாரால் நேர்ந்தது, எப்படி நேர்ந்தது என்று மட்டும் தெரியவில்லை. பலர் பலவாறு சொல்லுகிறார்கள். ஆதித்த கரிகாலர் அகால மரண மடைந்த பிறகு கடம்பூர் அரண்மனை முழுவதும் தீப்பட்டு எரிந்துவிட்டதாம். இளவரசரின் சடலத்தைத் தஞ்சைக்கு ஊர்வலமாக எடுத்து வருகிறார்களாம். திருக்கோவலூர் மலையமான் கடம்பூர் சம்புவரையரையும் அவரது குடும்பத் தையும் சிறைப்படுத்தி அழைத்து வரு கிறாராம். ஊர்வலத்தில் ஒரு லட்சம் ஜனங்களுக்கு மேல் முன்னும் பின்னும் வருகிறார்களாம்! அவர்கள் கொள் ளிடக் கரைக்கு வருவதற்குள் நாம் அந்த நதியைக் கடந்துவிட வேண்டும்!''

''திருமலை! நீ சொல்லுவது உண்மை யிலேயே பயங்கரமான செய்திதான்! வானத்தில் தூமகேது தோன்றியதன் காரணமாக ஜனங்கள் எதிர்பார்த்த விபரீதம் நேர்ந்து விட்டது! ஆகா! அந்த அசகாய சூரனின் கதி இப்படியா முடிய வேண்டும்?' ஐயோ! சுந்தர சோழருக்கு இது தெரியும்போது என்ன பாடுபடுவார்? நோய்ப் பட்டிருக்கும் சக்கரவர்த்திக்கும் இந்தச் செய்தியினால் ஏதாவது நேராம லிருக்க வேண்டுமே என்று எனக்குக் கவலையாக இருக்கிறது. கருணைக் கடலான சிவபெருமான்தான் சோழ குலத்தைக் காப்பாற்ற வேண் டும்!'' என்றார் மழவரையர் மகளார்.

''தாயே! சோழ குலத்துக்கு நேர்ந் திருக்கும் ஆபத்து ஒருபுறமிருக்கட்டும். இந்தத் துர் நிகழ்ச்சியினால் சோழ சாம் ராஜ்யமே சின்னாபின்னமாகி விடலாம் என்று எனக்குப் பயம் உண்டாகிறது.''

''அது ஏன் அந்த எண்ணம் உனக்கு உண்டாயிற்று, திருமலை!''

''சோழ நாட்டுத் தலைவர்கள் — சிற் றரசர்களுக்குள்ளே பெரும் சண்டை மூளலாம். இவ்வாறு சோழ நாட்டில் உள் சண்டையினால் இரத்த வெள்ளம் ஓடிக் கொண்டிருக்கும்போது வெளி நாட்டுப் பகைவர்கள் தைரியம் கொண்டு படையெடுக்கத் தொடங்கி விடுவார்கள்! அதன் விளைவுகளைப் பற் றிச் சொல்ல வேண்டுமா, தாயே!''

''திருமலை! சிற்றரசர்கள் — தலைவர் களுக்குள்ளே ஏன் சண்டை மூளும் என்று சொல்லுகிறாய்?''

''தங்களுக்குத் தெரிந்த காரணம் தான் தாயே! சிலர் தங்கள் திருக் குமாரரான மதுராந்தகர் அடுத்தபடி பட்டத்துக்கு வரவேண்டும் என்பார்கள். மற்றும் சிலர் அருள்மொழி வர்மர்தான் சிம்மாசனம் ஏறவேண்டும் என்பார்கள். ஏற்கனவே கொடும்பாளூர் வேளாரின் படைகள் தஞ்சைக் கோட்டையைச் சுற்றி முற்றுகை யிட்டிருக்கின்றன. இளவரசரின் சடலத்துடன் மலையமான் தஞ்சையை நோக்கிப் போகிறார். பழு வேட்டரையரைச் சேர்ந்த சிற்றரசர்கள் சைன்யம் திரட்டிக் கொண்டிருக் கிறார்கள். ஆகையால் தஞ்சையிலும் தஞ்சையைச் சுற்றிலும் சோழ நாட்டு வீரர்கள் ஒருவரையொருவர் கொன்று கொண்டு இரத்த வெள்ளம் பெருக்கப் போகிறார்கள். காவேரி முதலிய ஐந்து ஆறுகளிலும் தண்ணீர் வெள்ளத்துக் குப் பதிலாக இரத்த வெள்ளம் ஓடப் போகிறது! மகா அறிவாளியான முதன் மந்திரி அநிருத்தரே கலக்கம் அடைந் திருக்கிறார். விஜயாலயரும் ஆதித்தரும் பராந்தகரும் தங்கள் திருக் கணவரான கண்டராதித்தரும் நிலைநாட்டி அரசு புரிந்த சோழப் பேரரசு நம் நாளில் அழிந்து போய்விடலாம் என்றே பயப் படுகிறார். இதைத் தடுப்பதற்கு அநிருத் தருக்கே வழி ஒன்றும் தோன்றவில்லை!'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

''திருமலை! இறைவன் அருளால் இந்த மாபெரும் சாம்ராஜ்யத்துக்கு அத் தகைய விபத்து நேராமல் நான் தடுப் பேன். அதற்கு வழியை நான் அறி வேன். அந்த வழியைக் கடைப்பிடிக்க லாமா என்று என் மனத்தைத் திடப் படுத்திக் கொண்டு போகத்தான் நம்பி யாண்டாரிடம் வந்தேன். மதுராந்தக னுக்கும் அருள்மொழி வர்மனுக்கும் சிங் காதனப் போட்டி ஏற்பட்டால்தானே உள்நாட்டுச் சண்டை மூளும் என்று சொல்கிறாய்?''

''ஆம், தாயே! அத்தகைய சண்டை மூளாமல் எப்படித் தடுக்க முடியும்? ஆதித்த கரிகாலர் பிராயத்தில் சிறிது மூத்தவர் என்ற காரணமாவது இது வரையில் சொல்லக் கூடியதாக இருந் தது. இப்போது அவரும் போய்விட் டார். தங்கள் திருப் புதல்வரைக் காட் டிலும் அருள்மொழி வர்மர் இளையவர். ஆனால் மலையமானும் வேளாரும் சோழ நாட்டு மக்களும் இனி அருள்மொழி வர்மருக்கே பட்டம் என்று வற்புறுத்தப்

போகிறார்கள். பழுவேட்டரையர்கள் அதை ஒத்துக்கொள்ளப் போவதில்லை.''

''திருமலை! யார் ஒத்துக்கொண்டாலும் சரி, ஒத்துக்கொள்ளாவிட்டாலும் சரி. மதுராந்தகன் சிங்காதனம் ஏற மாட்டான். அதை நான் பார்த்துக் கொள்வேன். மகா புருஷராகிய என்னுடைய பதியின் விருப்பத்தை நான் நிறைவேற்றுவேன். மதுராந்தகனுக்குப் பட்டம் இல்லை என்று முடிவானால் உள்நாட்டுச் சண்டையும் இல்லைதானே?''

''ஆம்; அன்னையே! சோழ சாம்ராஜ்யம் சர்வ நாசம் அடையாமல் இச்சமயம் தாங்கள் காப்பாற்றினால்தான் உண்டு. வேறு வழியே கிடையாது!'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

''என்னால் ஆவது ஒன்றுமில்லை. மாதொரு பாகனாகிய மகேசுவரன் எனக்கு அத்தகைய சக்தியை அருள வேண்டும்!'' என்றார் பெரிய பிராட்டியார்.

சிறிது நேரம் இருவரும் மௌனமாகச் சென்றார்கள். கொள்ளிடத்தின் ஓடத்துறை சற்றுத் தூரத்தில் தெரிந்தது.

''திருமலை! சற்று முன் ஒரு பயங்கரமான செய்தியைக் கூறினாய். ஆதித்த கரிகாலன் உயிர் இழந்தான் என்றாய். மூன்று உலகையும் ஆள வேண்டிய அந்த வீராதி வீரன் இறந்ததே விபரீதமான செய்திதான். இளவரசன் துர்மரணம் அடைந்ததாகக் கூறினாயே? அது எப்படி? தன் உயிரைத் தானே போக்கிக்கொண்டானா? அல்லது யாராவது அவனைக் கொன்று விட்டதாகச் சொல்லுகிறார்களா?'' என்று பெரிய பிராட்டி வினவினார்.

''தேவி! அதைப் பற்றிப் பலவிதப் பேச்சுக்கள் பரவி வருகின்றன. சம்புவரையர் வீட்டில் இது நடந்தபடியால் அவர்மீது சந்தேகப்பட்டு அவரையும் அவர் குடும்பத்தார் அத்தனை பேரையும் மலையமான் சிறைப் படுத்திக் கொண்டு வருகிறார். சம்புவரையர் மகன் கந்தமாறன் மட்டும் தப்பிச் சென்று விட்டானாம்...''

''சம்புவரையரால் இது நேர்ந்திருக்கும் என்று உண்மையில் எனக்கு நம்பிக்கைப் படவில்லை. எவ்வளவுதான் விரோதமிருந்தாலும் அவருடைய இல்லத்துக்கு விருந்தாளியாக வந்திருந்த சக்கரவர்த்தித் திருமகனைக் கொல்லுவதற்கு யாருக்குத்தான் மனம் வரும்? சம்புவரையர் அப்படிச் செய்திருக்க முடியாது. அவர் இதைப்பற்றி என்ன சொல்கிறாராம்? இளவரசர் கரிகாலரின் மரணம் எப்படி நேர்ந்திருக்கும் என்று சொல்லுகிறாராம்?''

''தேவி! பழையாறைக்கு முன்னொரு சமயம் வாணர் குலத்து வீர வாலிபன் ஒருவன் வந்திருந்தானே நினைவிருக்கிறதா? அவனைக் குந்தவைப் பிராட்டியார் ஈழ நாட்டுக்குக் கூட ஓலையுடன் அனுப்பி வைக்கவில்லையா?''

''ஆம்; ஆம்; ஞாபகம் இருக்கிறது. அவனைப் பற்றி என்ன?''

''இளவரசரின் உயிரற்ற சடலத்துக்கு அருகில் அந்த வாலிபன்தான் இருந்தானாம். ஆகையால் அவனேதான் கொன்றிருக்க வேண்டும் என்று சம்புவரையர் சொல்கிறாராம்...''

''திருமலை! அப்படி ஒருநாளும் நேர்ந்திராது. அந்தப் பிள்ளையைப் பார்த்த ஞாபகம் எனக்கு இருக்கிறது...''

''நானும் அப்படித்தான் நினைக்கிறேன், தாயே! ஆனால் சந்தர்ப்பங்களும் சாட்சியங்களும் வந்தியத் தேவனுக்கு எதிராக இருக்கின்றன!''

''ஐயோ! பாவம்! இளையபிராட்டி அந்த வாலிபனிடம் ரொம்ப நம்பிக்கை வைத்திருந்தாள். இந்தச் செய்தி தெரிந்தால் அவள் துடி துடித்துப் போவாள்!''

''தாயே! தங்களிடம் அதைப்பற்றிக் கேட்டுக் கொள்ளலாம் என்று நினைத்தேன். தாங்கள் குடந்தைக்குச் சென்றதும் இளைய பிராட்டியைச் சந்தித்துத் தஞ்சைக்கு அழைத்துக் கொண்டு போவது நல்லது...''

''அதுதான் என் உத்தேசம். இளைய பிராட்டி எனக்காக அங்கே காத்துக் கொண்டிருக்கிறாள்...''

''மற்றவர்கள் மூலம் பராபரியாக இளைய பிராட்டிக்குச் செய்தி தெரிவதற்கு முன்னால் தாங்களே சொல்லி விடுவதுதான் நல்லது...''

''அப்படியானால் இப்போது நீ என்னுடன் வரப்போவதில்லையா, திருமலை?''

''தேவி! தாங்கள் அநுமதி கொடுத்தால் கொள்ளிடத்தின் தென் கரையில் தங்களிடம் விடைபெற்றுக் கொள்ள விரும்புகிறேன்....''

''எங்கே போகப் போகிறாய்?''

''இளவரசர் கரிகாலரின் மரணத்தில் ஏதோ ஒரு மர்மம் இருக்கிறது. அதைக் கண்டுபிடித்து வருவதற்காகப் போக விரும்புகிறேன்...''

''எப்படிக் கண்டுபிடிப்பாய்?''

''தேவி! பாண்டிய நாட்டுச் சதிகாரர்களைப் பற்றித் தங்களுக்கு முன்னமே ஒரு முறை சொல்லியிருக்கிறேன். அச் சதிகாரர்களில் ஒருவனைக் கொள்ளிடத்தின் தென் கரையில் நான் வரும்போது பார்த்தேன்'' என்றான் திருமலை.

பி.வி.ஆர் எழுதும்

# சென்ட்ரல்

புதிய தொடர் கதை

**கல்கி**
ஆகஸ்ட்
8உ
இதழில்
ஆரம்பம்



"உடனே நீ ஏன் அவனைப் பின் தொடர்ந்து செல்லவில்லை?"

"கொள்ளிடத்தின் வடகரைக்கு வந்த பிறகுதான் கரிகாலர் மரணத்தைப் பற்றிச் செய்தி தெரிந்தது, அரசி! எனக்கு விடை கொடுங்கள். சதிகாரர்கள் சாதாரணமாகக் கூடிப் பேசுகிற இடம் எனக்குத் தெரியும்..."

"சரி, போய் வா! இளைய பிராட்டி குந்தவையிடம் என்ன சொல்லட்டும்? அவளை நினைத்தால் எனக்குப் பெருங் கவலையா யிருக்கிறது."

"வந்தியத்தேவன் மீது குற்றம் சாட்டப்பட்டால் அதைப் பற்றிக் கவலைப் படவேண்டாம் என்று சொல்லுங்கள். உண்மைக் குற்றவாளியை நான் எப்படியும் கண்டுபிடித்துக் கொண்டு வருவேன் என்று சொல்லுங்கள்!"

"இறைவன் அருளினால் நீ போகும் காரியம் வெற்றி யடையட்டும்!" என்றார் சிவபக்தியில் சிறந்த பெண்மணியான செம்பியன்மா தேவி.

இதற்குள் கொள்ளிடக் கரை வந்து விட்டது. பெரிய பிராட்டி செம்பியன் மாதேவியும் பரிவாரங்களும் ஏறிச் செல்வதற்காகப் படகுகள் காத்திருந்தன.

ஆழ்வார்க்கடியான் வேறொரு சிறிய படகு பிடித்துக் கொண்டு அவர்களுக்கு முன்னால் விரைந்து படகைச் செலுத்தச் சொல்லி, அங்கிருந்து சென்றான்.

## நாற்பத்திநான்காம் அத்தியாயம்

# மலைக் குகையில்

கொள்ளிடத்தின் தென் கரையை அடைந்ததும் ஆழ்வார்க்கடியான் மேற்றிசையை நோக்கிப் போனான். கொள்ளிடத்தின் உடைப்பினால் எங்கும் வெள்ளக் காடாக இருந்ததைப் பார்த்தான். ஆயினும் கொள்ளிடத்தில் தண்ணீர் மட்டம் குறைந்து வந்ததைப் போல் உடைப்பினால் தண்ணீர் பரவி யிருந்த இடங்களிலும் வேகமாகத் தண்ணீர் வடிந்துகொண்டு வந்தது. கடைசியாகத் திரும்புறம்பயத்தை அடைந்தான். இந்த ஊர் மட்டும் அவ்வளவு வெள்ளத்தினாலும் பாதிக்கப்படாமல் இருந்ததைப் பார்த்து வியந்தான். ஆதி காலத்தில் உலகமே பிரளயத்தில் ஆழ்ந்த போது திருப்புறம்பயம் மட்டும் தண்ணீரில் மூழ்காமல் இருந்தது என்னும் வரலாறு இதனாலேதான் ஏற்பட்டது போலும் என்று எண்ணிக் கொண்டு பள்ளிப் படைக் காட்டை நெருங்கினான். அங்கே புயலினால் பல மரங்கள் சாய்ந்து விழுந்திருந்த போதிலும் அவன் ஒளிந்து பார்ப்பதற்கு வேண்டிய அடர்த்தி இல்லாமற் போகவில்லை. அவ்விதம் பார்த்த போது, பள்ளிப் படைக் கோவில் வாசலில் ஆண்கள் மூவரும் ஒரு ஸ்திரீயும் நின்று பேசுவது தெரிந்தது. நன்றாய் உற்றுப் பார்த்தபோது எல்லாரும் அவனுக்கு முன்னாலே தெரிந்தவர்கள் என்று அறிந்தான். அதே பள்ளிப்படைக் காட்டில் முதன் முதலில் சதியாலோசனைக்காகக் கூடியவர்களில் இந்த மூன்று ஆண் பிள்ளைகளும் இருந்தார்கள். ஒருவன் சோமன் சாம்பவன், இன்னொருவன் கிரமவித்தன். மூன்றாவது ஆண் இடும்பன்காரி. ஸ்திரீ, படகோட்டி முருகையனுடைய மனைவி. அவர்களில் இடும்பன்காரி மற்றவர்களுக்கு ஏதோ சொல்லிக் கொண்டிருந்தான். அச்செய்தி அவர்களுக்கு உற்சாகத்தை அளித்ததாகத் தெரிந்தது. "சரி! — அப்படியானால் நாமும் பச்சை மலை அடிவாரத்துக்கு உடனே புறப்படலாம். போய்ச் சேர இரண்டு நாட்களுக்கு மேலாகும்" என்று சோமன் சாம்பவன் கூறியது ஆழ்வார்க்கடியான் காதில் விழுந்தது.

அவர்களுக்கு முன்னால் தான் அங்கேயிருந்து புறப்பட்டு விடலாம் என்று எண்ணி ஆழ்வார்க்கடியான் திரும்பினான். அவனுடைய மார்புக்கு நேரே கூரிய கத்தியைக் கண்டு திடுக்கிட்டான். அதைப் பிடித்திருந்த கை பூங்குழலியின் கை என்று தெரிந்ததும் திகைப்பு நீங்கியது. இருவரும் ஒருவரை யொருவர் தெரிந்து கொண்டதும் புன்னகையினால் தங்களின் வியப்பைத் தெரிவித்துக் கொண்டார்கள். சமிக்ஞையின் மூலமாக வாய் பேசாமல் சிறிது நேரம் காத்திருக்க வேண்டிய அவசியத்தையும் உணர்த்திக் கொண்டார்கள்.

சதிகாரர்கள் அங்கிருந்து போய் விட்டார்கள் என்று தெரிந்த பிறகு ஆழ்வார்க்கடியான், "பூங்குழலி! தஞ்சாவூரிலிருந்து நீ எப்படி இங்கே வந்தாய்? எதற்காக வந்தாய்?" என்று கேட்டான்.

"பழி வாங்குவதற்காக வந்தேன்" என்றாள் பூங்குழலி.

"என்ன பழி? எதற்காக?"

"இவர்களிலே ஒருவன் என் அத்தையைக் கொன்றுவிட்டு ஓடி வந்த பாதகன். அப்பாதகனை விடாமல் பின் தொடர்ந்து இவ்விடத்தில் வந்து

பிடித்தேன். இங்கே இன்னும் மூன்று பேர் அவனுக்கு முன்னால் வந்திருந்தார்கள். அதிலும் என் அண்ணன் மனைவியை அவர்களுடன் பார்த்ததும் திகைத்துப் போனேன்! அதற்குள் நீ ஒருவன் வந்து குறுக்கிட்டாய். இப்போது என்ன செய்யலாம்? நீ எனக்கு உதவி செய்வதாக இருந்தால் இவர்களை விடாமல் தொடர்ந்து போய் என் அத்தையைக் கொன்றவனைக் கொன்று விட்டு வருவேன்'' என்றாள்.

''ஐயோ! பாவம்! உன் அத்தை என்றால், அந்த ஊமை ராணி மந்தாகினிதானே? அவளை எதற்காக இவர்களில் ஒருவன் கொன்றான்?'' என்று ஆழ்வார்க்கடியான் கேட்டான்.

''அத்தையைக் கொல்ல வேண்டும் என்று நினைத்துக் கொல்லவில்லை. சக்கரவர்த்தியைக் கொல்ல நினைத்து அவர் மேல் அவன் எறிந்த வேலை என் அத்தை தாங்கிக் கொண்டாள்!'' என்றாள்.

''ஓகோ! அப்படியா? ஊமை ராணி தன் உயிரைக் கொடுத்துச் சக்கரவர்த்தியைக் காப்பாற்றினாளா? இதெல்லாம் எப்படி நடந்தது? சற்று விவரமாய்ச் சொல், கேட்கலாம்!''

''விவரமாகச் சொல்வதற்கு இது தானா சமயம்? அவர்கள் தப்பித்துக் கொண்டு போய்விடுவார்களே?''

''பூங்குழலி! அவர்கள் போகும் இடம் எனக்குத் தெரியும். எதற்காக யாரைச் சந்திப்பதற்காகப் போகிறார்கள் என்றும் ஊகித்துக் கொண்டேன். வழியிலே அவர்களைத் தடை செய்யாமலிருப்பதே நல்லது. அவர்கள் போகுமிடத்துக்கு நாமும் போகலாம். அங்கே நான் தெரிந்து கொள்ள வேண்டியதைத் தெரிந்துகொண்ட பிறகு நீ உன் பழியை முடித்துக்கொள்ளலாம்'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

''அப்படியானால் புறப்படு! போகும் போதே தஞ்சாவூரில் நடந்ததையெல்லாம் உனக்கு விவரமாகச் சொல்கிறேன்!'' என்றாள் பூங்குழலி.

இருவரும் கொள்ளிடத்தைப் படகின் மூலமாகக் கடந்து அக்கரை அடைந்தார்கள். வடமேற்குத் திசையை நோக்கிப் பிரயாணம் செய்தார்கள். மூன்று தினங்கள் இரவும் பகலும் பிரயாணம் செய்த பின்னர் பச்சை மலையின் அடிவாரத்தை அடைந்தார்கள். அந்த அடி

## வாஷிங்டன் திருமணம்

★ அண்மையில் திருமணம் புரிந்து கொண்ட நிக்ஸன் மகள் பட்ரீஷியாவுக்கு வயது இருபத்தைந்து.

★ அவர் கணவர் எட்வர்ட் பின்ச் காக்ஸ் அவரை விட ஏழு மாதம் இளையவர். எட்வர்டின் உயரம் ஆறு அடி ஓரங்குலம்.

★ நிக்ஸன் தம்பதியர் நூறு பேர்களையும் காக்ஸ் தம்பதியர் நூறு பேர்களையும் திருமணத்துக்கு அழைக்க, மணமக்களின் நண்பர்கள் இருநூறு பேர் வந்து குழுமினர். ஆக மொத்தம் ஒயிட் ஹவுஸ் திருமணத்துக்கு நானூறு பேர்களே அழைக்கப்பட்டனர். பிரமுகர்கள் பலர் தங்கள் அழைப்பிதழ் தபாலில் தவறிவிட்டிருக்க வேண்டும் என்று கருதி ஒயிட் ஹவுஸுக்கு டெலிபோன் செய்தனர். கிடைத்த பதில் அவர்கள் கோபத்தை ஏமாற்றமாக மாற்றியது.

★ பரிசுகள் ஏதும் எதிர்பார்க்கப்படவில்லை என்பதாகத் தெளிவாக்கப்பட்டிருந்தும் கூட சியாங்காய் ஷேக் உள்பட பல நாட்டுத் தலைவர்கள் விலையுயர்ந்த பரிசுகள் அனுப்பி யிருந்தனர்.

★ ஏழு அடுக்குக் கொண்ட திருமண கேக்கின் உயரம் ஆறு அடி பத்து அங்குலம். எடை 350 பவுண்டு. அடிமட்டத்தில் அதன் அகலம் ஐந்து அடி.

★ ஒயிட் ஹவுஸின் தலைமைச் சமையல்காரர் ஹாலர், கேக் எப்படித் தயாரிக்கப்படும் என்பதை முன்கூட்டியே அறிவித்துவிட்டார். உடனே பல பத்திரிகைக் காரியாலயங்களிலும் டெலிவிஷன் ஸ்தாபனங்களிலும் இந்தக் கேக் பரீட்சார்த்தமாகத் தயாரிக்கப்பட்டது. அவர்கள் அபிப்பிராயம்: ''இந்தக் கேக் சரிக்காது; செங்கல்லாட்டம் இருக்கும்.'' மிஸஸ் நிக்ஸன் சிரித்துக் கொண்டே சொன்னார்: ''அங்கெல்லாம் என்ன கோளாறாகப் போயிற்றோ தெரியாது. ஹாலர் இங்கே பரீட்சார்த்தமாகத் தயாரித்த கேக் பிரமாதமாக இருந்தது.''

★ ஆறு அடி உயரமுள்ள கேக்கை வெட்டுவது எப்படி? ஹாலர் மணமக்களுக்கு முன்கூட்டியே யோசனை சொன்னார்: ''பட்டாக் கத்தியைத் துஷ்ட மிருகத்தின் மீது செருகுவது போல் கேக் வெட்டும் கத்தியைப் பயன்படுத்துங்கள்!''

★ இது ஒயிட் ஹவுஸில் நடந்த பதினாறாவது திருமணம். ஜனாதிபதியின் மகள் திருமணம் என்று மட்டும் கணக்கிட்டால் இது எட்டாவதாகும்

★ மிஸஸ் நிக்ஸன் மகளுக்கு அளித்த ஒரே அறிவுரை: ''சந்தோஷமாக இரு!''

★ ஜனாதிபதியான பிறகு நடனமே ஆடாத நிக்ஸன் மகள் திருமணத்தின்போது ஜோடி சேர்ந்து ஆடினார்.

ஆதாரம்: ''டைம்''



வாரத்தில் அடர்ந்த காடு மண்டிக் கிடந்தபடியால் அவர்கள் தேடிச் சென்றவர்கள் எங்கே இருக்கக் கூடும் என்பதை இலேசில் கண்டுபிடிக்க முடியவில்லை. இவ்வளவு பிரயாசையுடன் பிரயாணம் செய்து வந்தது வீணுகி விடுமோ என்று மனச் சோர்வு அடைந்தார்கள்.

திடீர் என்று ஆந்தையின் குரல் ஒன்று கேட்டது. பதிலுக்கு மற்ருெரு குரல் அதே மாதிரி கேட்டது. ஆழ்வார்க்கடியானுடைய முகம் மலர்ந்தது. பூங்குழலிக்குச் சமிக்ஞை மூலமாகப் பேசாமல் தன்னுடன் வரும்படி தெரிவித்தான். ஆந்தைகளின் குரல் கேட்ட இடத்தில் இடைவெளி தென்பட்டது. அங்கே ஏழெட்டுப் பேர் இருந்தார்கள். சிலர் நெருப்பு மூட்டிச் சமையல் செய்து கொண் டிருந்தார்கள். மற்றவர்கள் பேசிக்கொண் டிருந்தார்கள். முன்னமே அங்கு இருந்தவர்களும் புதிதாக வந்து சேர்ந்தவர்களும் ஒருவருக் கொருவர் ஏதோ வியப்பான செய்தி சொல்லிக் கொண்டிருந்தார்கள் என்று தெரிந்தது.

முன்னமே அங்கிருந்தவர்களில் ரவிதாஸனும் ஒருவன். அவன் அப்போது புதிதாக அங்கே வந்து சேர்ந்தவர்களுக்குச் சற்றுத் தூரத்தில் இருந்த மலைக் குகையொன்றைச் சுட்டிக் காட்டி ஏதோ தெரிவித்துக் கொண்டிருந்தான். இதை ஆழ்வார்க்கடியான் கவனித்துக்கொண்டான். மெல்லிய குரலில் ''பூங்குழலி! நாம் தேடி வந்தவர்கள் அந்தக் குகைக்குள்ளேதான் இருக்க வேண்டும். நான் மெள்ளக் குகைக்குள்ளே நுழைந்து பார்க்கிறேன். இவர்களில் யாராவது குகையை நெருங்கி வந்தால் நீ ஒரு குரல் கொடு!'' என்ருன்.

''ஆந்தை கத்துவது போல் என்னுல் கத்த முடியாது. குயில் கூவுவது போல் கூவுகிறேன்!'' என்ருள் பூங்குழலி.

**ம**லைக் குகைக்குள்ளே காற்றும் வெளிச்சமும் நுழைவதற்காகச் சில பெரிய துவாரங்கள செய்யப்பட்டிருந்தன. ஆகையால் உள்ளே நன்ருக வெளிச்சம் வந்து கொண்டிருந்தது.

அந்த வெளிச்சத்தில் ஆழ்வார்க்கடியான் ஓர் அபூர்வமான காட்சியைக் கண்டான். பெரிய பழுவேட்டரையர் காளாமுகச் சாமியார்களைப் போல் புலித்தோல் உடை தரித்திருந்தார். அவர் பக்கத்தில் மண்டை ஓட்டு மாலை ஒன்று கிடந்தது. அவர் உடம்பிலிருந்து ரத்தம் மிகச் சேதமாகி யிருக்க வேண்டுமென்று அவர் முகம் வெளுத்துப் போயிருந்ததிலிருந்து ஊகிக்கும்படி இருந்தது. தரையிலே படுத்திருந்தவர் அப்பொழுதுதான் சுய நினைவு பெற்று எழுந்து உட்கார முயன்றதாகத் தோன்றியது. ஏதோ பயங்கரச் சொப்பன உலகிலிருந்து அப்போதுதான் விழித்தெழுந்தவர் போல் காணப்பட்டார். அவருடைய கண்கள் திருதிருவென்று விழித்தன.

அவர் பக்கத்தில் நந்தினி இருந்தாள். அவள் ஆபரண அலங்காரங்கள் கலையப் பெற்றுத் தலைவிரி கோலமாக இருந்தாள். ஆயினும் அவளுடைய வசீகர சௌந்தரியம் முன்னைவிடப் பன்மடங்கு அதிகமாகப் பிரகாசித்தது. அன்பும் ஆதரவும் பரிதாபமும், பச்சாதாபமும் ததும்பிய குரலில், ''ஐயா! இந்தக் கஞ்சியை அருந்துங்கள்!'' என்று கூறிக்கொண்டே ஒரு மண் பாத்திரத்தை அவரிடம் நீட்டிக்கொண்டிருந்தாள்.

பழுவேட்டரையர் அவளைத் திரும்பிப் பார்த்தார். அவர் முகத்தில் ஒரு கண நேரம் எல்லையற்ற இன்பத்துக்கு அறிகுறியான புன்னகை மலர்ந்தது.

''நந்தினி! என் பேரரசி! நீதானு இப்போது பேசினுய்? உன் குரல்தானு இது? நாம் இப்போது எங்கே இருக்கிருேம்? மரணத்தின் வாசலுக்குச் சென்றிருந்த என்னை நீயா திரும்பக் கொண்டு வந்து சேர்த்தாய்? அன்று சாவித்திரி சத்தியவானுக்குச் செய்ததை இன்று நீ எனக்குச் செய்தாயா? எனக்கு நினைவு வந்தபோது உன்னுடைய மலர்க் கையினுல் என்னுடைய மார்பைத் தொட்டுப் பார்த்துக் கொண்டிருந்ததாகத் தோன்றியதே அது உண்மையா? மூன்று ஆண்டு காலமாக என்னைத் தொடவும் மறுத்தவள் கடைசியாக மனமிரங்கி விட்டாயா? எங்கே கொடு! கஞ்சியைக் கொடு! உன் கையினுல் கஞ்சி கொடுத்தால் அதுவே எனக்குத் தேவாமிர்தமாகும்!'' என்ருர்.

இவ்விதம் சொல்லிக் கொண்டே நந்தினியின் கையிலிருந்த மண் பாண்டத்தை வாங்கிக் கொண்டவர் திடீரென்று அவளை வெறித்துப் பார்க்கத் தொடங்கினுர். அடியோடு மாறிப்போன பயங்கரமான குரலில் ''அடி பாதகி! ராட்சஸி! நீதானு? என்னைத் தொடுவதற்கு உனக்குத் தைரியம் வந்ததா? என் நெஞ்சில் கத்தியால் குத்தப் பார்த்தாயா? அப்போது நான் விழித்துக்கொண்டேனு? இந்தப் பாத்திரத்தில் இருப்பது உண்மையில் கஞ்சிதானு? அல்லது என்னைக் கொல்லுவதற்கான நஞ்சா? உன் கையால் கொடுப்பது தேவாமிர்தமானுலும் எனக்கு அது விஷமல்லவா?'' என்று கூறிவிட்டு அம் மண் பாண்டத்தை வீசி எறிந்தார். அது தடாலென்று குகைச் சுவரில் மோதிச் சுக்குநூருகிச் சிதறி விழுந்தது.

(தொடரும்)

'பொருளே கவிதையின் உடல்; கற்பனையே அதன் ஆன்மா' என்று அறிஞர் கோல்ரிட்ஜ் சொன்ன கருத்தை வலியுறுத்துகிறார் கவிஞர் குயிலன். திரு வ. ரா. அவர்களை ஆசிரியராகக் கொண்டு 1938ல் 'பாரத தேவி' என்னும் மாதமிருமுறை பத்திரிகை வந்தபோது, அதில் இவரது முதல் கவிதை வெளிவந்தது. ''இலக்கணத்தோடு எழுதுவதெல்லாம் கவிதையாகி விடாது; இலக்கணம் இல்லாமல் எழுதுவதும் கவிதையாகாது; உணர்ச்சிதான் கவிதை'' என்கிறார் குயிலன்.

'நிழல்' என்ற கவிதை எப்படிப் பிறந்தது?

''உங்களுக்குப் பின்னும் வந்தவர்களெல்லாம் முன்னேறி விட்டார்கள். நீங்கள் என்





னடாவென்றால் அப்படியே இருக்கிறீர்களே!' என்று பிறர் சொல்வதை நாம் கேள்விப்படுகிறோமே, அதெல்லாம் என்ன அதிர்ஷ்டமா? இல்லவே இல்லை. காலத்தின் கோலம்!'' என்று சொல்லும் கவிஞரின் கவிதைக் கோலம் இது:

காலையில் பின்தொடர்ந்து
　　கடுவெயிலில் ஒன்றாகி
மாலையில் என்முன்னே
　　வந்து வழிகாட்டும்
என்நிழலைப் பின்பற்றி
　　இப்போது செல்கின்றேன்
வாழ்க்கைப் பெருவழியில்
　　என்பின்னே வந்தவர்கள்
எத்தனையோ பேர்இன்று
　　என்முன்னே செல்கின்றார்
வெற்றிச் சிரிப்புடனே
　　வீரநடை போடுகின்றார்
நிழலுக்குத் தோற்றுவிட்டால்
　　நேரத்தை என்சொல்வேன்?

கவிஞர் குடியிருந்த வீட்டில் ஒரு வேப்ப மரம் செழித்து வளர்ந்திருந்தது. வேப்பம் பழங்கள் கீழே உதிர்ந்தபோது கவிஞருக்கு ஓர் எண்ணம் தோன்றியது. உதிரும் பழங்களெல்லாம் மரங்களாக வளர்ந்தால் இந்தப் பூமியில்தான் வாழ முடியுமா? அதைப் போல் நினைக்கின்ற எண்ணமெல்லாம் நிறைவேறி விட்டால்....?

**எண்ணமெல்லாம்**
**நிறைவேறினால்**
**ஏற்குமோ பூமி?**

ஆண்டுதோறும் ஆலமரம்
அளவற்ற காய்காய்க்கும்
அளவற்றுக் காய்த்திருக்கும்
அத்தனையும் பழமாகி
பழத்திலுள்ள வித்தெல்லாம்
பழுதின்றித் தான்முளைத்து
தழைத்து மரமாகி
தாழக் கிளைபரப்பி
விழுதுவிட்டு நின்றிடுமேல்
மேதினிதான் தாங்கிடுமோ?
ஆகையினால் வீணான
அளவற்ற வித்துகளே
வாகாக வாழ்த்துகிறேன்
மனமார நன்றிசொல்வேன்!

மரத்திலிருந்து விழும் வித்துக்களெல்லாமா மரமாகின்றன? இல்லையே. அப்படி மரமாகாமல் இருப்பதுதான் நல்லது. அதைப் போல எண்ணுகின்ற எண்ணமெல்லாம் நிறைவேறாமல் இருப்பதுதான் நல்லது. அதற்காகத்தான் வீணான அளவற்ற வித்துகளுக்கு நன்றியைச் சொல்கிறார் கவிஞர். இன்னொரு சம்பவமும் குறிப்பிடுகிறார்:

''அலாவுதீனும் அற்புத விளக்கும் என்ற இந்திப் படத்தின் தமிழ் 'டப்பிங்' செய்து கொண்டிருந்தேன். அலாவுதீன் குகையினுள்ளே மாட்டிக் கொண்டு, வெளியே வரத்






தவிக்கிறான். வெளியே வர உதவும்படி மந்திரவாதியிடம் வேண்டுகிறான். ஆனால் அவன் காலடியிலேயே அற்புத விளக்கு இருக்கிறது. அதை மறந்துவிட்டு இப்படித் தவிப்பானேன்? இந்தக் காட்சியே கவிதையாக உருவெடுத்தது என் உள்ளத்தில்.''

வெங்கொடி பூதம்
விழுங்கவரு கின்றதென
புன்மையினால் நொந்து
புழுவாய்த் துடிக்கின்றாய்
மாங்கை இருளின்
மத்தியில்உன் காலடியில்
மாய விளக்கொன்று
மறைந்து கிடக்கிறது
தூய விளக்கில்
தூசி படிந்துளது
வாடித் தவிக்காமல்
வாய்புலம்பி நிற்காமல்
தேடி எடுத்து
விளக்கைத் தேய்த்துவிடு
மாயம் நிறைந்த
மனவிளக்கைத் தேய்த்துவிட்டால்
வாய்பொத்தி வேதாளம்
வந்துனக்குக் கீழ்ப்படியும்

பேட்டி: பி. வி. கி


இடுக்கண்
களைந்திடும் நட்பு போல்

# வலியைப் போக்கிடும் 'ஆஸ்ப்ரோ'

வலியால் அவதிப்படும்போது விரைவில் நிவாரணம் பெற 'ஆஸ்ப்ரோ'வை நம்புங்கள். 'ஆஸ்ப்ரோ' மட்டுமே மைக்ரோ–ஃபைன் செய்யப்படுகிறது. அதாவது, அது அதிவேகமாகக் கரைந்து அதிவேகமாகக் கிரகிக்கப்பட்டு, வலியை அதிவேகமாக வெளியேற்றிவிடுகிறது. சாதாரண வலிநிவாரணிகளைவிட இரு-மடங்கிற்கும் அதிகமான வேகத்துடன் 'ஆஸ்ப்ரோ' வேலை செய்கிறது என்பதை விஞ்ஞானரீதியான பரிசோதனைகள் நிரூபித்துள்ளன!

எனவே, வலியால் அவதிப் படும்போது, நீங்கள் நம்பக்கூடிய நண்பனை நாடுங்கள்—மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' சாப்பிட்டு உடனடி நிவாரணம் பெறுங்கள்.

கீழ்க் கண்டவைகளுக்கு மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' சாப்பிடுங்கள்: நோவு • தலைவலி • உடல்வலி • ஃப்ளு • ஜுரவேகத்துடன் கூடிய ஜலதோஷம் • மூட்டு வலி-தொண்டை அழற்சி-பல்வலி.

சாப்பிடும் அளவு: வயது வந்தவர்கள்: இரண்டு மாத்திரைகள். தேவைப்பட்டால் மீண்டும் சாப்பிடவும்.

குழந்தைகள்: ஒரு மாத்திரை அல்லது உங்கள் டாக்டர் சொற்படி.






**தாமத நிவாரணம்**
பெரிய அணுக்கூறுகள் மெதுவாகக் கிரகிக்கப்படு-கின்றன. வலியின் இருப்பிடத்தை அடைய அதிக நேரமாகிறது. நீங்கள் அனாவசியமாக வலியால் அவதிப்படுகிறீர்கள்.




**துரித நிவாரணம்**
நுண்ணிய அணுக்கூறுகள் விரைவில் கிரகிக்கப்படுகின்றன. வலியின் இருப்பிடத்-ூக அதிவேகமாக அடை-க றன. வலியை அதிவேக-மாகப்போக்கி விடுகின்றன.

**'ஆஸ்ப்ரோ' மட்டுமே மைக்ரோஃபைன் செய்யப்படுகிறது**

**அதிவேகமாக வலியை வெளியே இழுப்பதற்காக**

நிகோலஸ் (N) தயாரிப்பு

A.G.43 TH

# கடுகுக்குள் அடங்கிய தொழில் சமுத்திரம்!



**பொ**ங்கிப் பெருகிப் பாய்ந்து வந்த காவேரியைத் நமது கமண்டலத்துக்குள் அடக்கினார் அகஸ்தியர். மீண்டும் சிறுகச் சிறுக அதனைப் பெருக விட்டார்.

ஐந்நூறு பக்கம் உள்ள ஒரு நூலை ஐம்பது பக்கங்களுக்குள் சுருக்கி விளங்கவும் வைக்கிறது ரீடர்ஸ் டைஜெஸ்ட் பத்திரிகை.

ஏறக்குறைய இந்த மாதிரியான ஒரு சாதனையை ஸ்ரீமதி மணிகண்டவாலாவும் செய்திருக்கிறார்.

அமால்கமேஷன்ஸ் ஸ்தாபனத்தின் இருபத்தெட்டு தனித் தனி நிறுவனங்களும் இயங்கும் விதத்தை மவுண்ட் ரோடில் ஒரு சின்னஞ் சிறு இடத்தில் நாம் பார்த்து உணர வகை செய்திருக்கிறார்.

கடுகுக்குள் தொழில் சமுத்திரத்தையே அடக்கி யிருக்கிறார்! இந்த ஒளி, ஒளி, புகைப் படக் கண்காட்சியைப் பார்வையிட வரும் போது ஸ்ரீமுதன் முதலில் தொழிலதிபர் இரு அனந்தராம கிருஷ்ணனின் திருவுருவப் படமும் அவரது பொன் மொழியுமே நமது கவனத்தை ஈர்க்கின்றன. ''ஊக்கத்துடன், நேர்மையுடன், ஆரவாரமின்றி, பரிசோ பதவியோ எதிர்பாராமல் கடுமையாக உழைப்பது தான் தொன்றுதொட்டு வந்துள்ள நமது பண்பாடு'' என்ற வாசகங்களைப் படிக்கிறோம்.

சர்வதேசக் கண்ணோட்டத்துடன் அமைந்துள்ள இந்தக் கண்காட்சியில், ஒவ்வொரு தொழிலகத்தின் காட்சிப் பொருள்களையோ, புகைப் படங்களையோ காண்கையில் ஆங்கிலத்தில் அவை பற்றிய சிறிய விளக்கம் ஒலிக்கிறது.

பதினெட்டாம் நூற்றாண்டின் சென்னை நகரத் தோற்றத்தை — குதிரை சாரட்டிலும் பல்லக்கிலும் செல்வந்தர் பவனி வரும் காட்சியை — பிரும்மாண்டமான வண்ண ஓவியம் நம்கண் முன்னே கொண்டு வருகிறது. அதற்கருகிலே பதினெட்டாம் நூற்றாண்டில் ஸிம்ஸன்

படங்கள்: அமால்கமேஷன்ஸ் ஒளி, ஒலிக் கண்காட்சியில் இரு பகுதிகள்.



தயாரித்த ராஜாங்க சாரட்டு நம்மைக் கவர்ந்திழுக்கிறது. நெதர்லண்டு இளவரசரும் வேல்ஸ் கோமகனும் பயன்படுத்திய சாரட்டு இது. 'கோச்' அருகில் உள்ள சீமாட்டி உயிருள்ள பெண் தானோ என்ற மயக்கம் அனைவருக்கும் ஏற்படுகிறது.

அன்று நான்கு குதிரைகள் இழுத்துச் செல்லும் கோச்சுத் தயாரித்த சிம்சன் இன்று பல குதிரை சக்தியுள்ள பெர்க்கின் டீசல் இன்ஜின்களை உருவாக்குகிறது. இன்னும் டீ முதல் டிராக்டர் வரை பல பொருட்களை உற்பத்தி செய்யும் அமால்கமேஷன்ஸ் நிறுவனங்கள் 16,000 மக்களுக்கு வேலை வாய்ப்பு அளிக்கின்றன.



ஸ்ரீமதி மணிகண்டவாலா

"ஓராண்டில் அமால்கமேஷன்ஸ் ஸ்தாபனங்கள் இரண்டு கோடி ரூபாய்க்குத் தம் தயாரிப்புக்களை ஐம்பத்தொரு நாடுகளுக்கு ஏற்றுமதி செய்கின்றன. மேலும் ஏற்றுமதியைப் பெருக்க வேண்டும் என்ற எண்ணத்தில் அயல்நாட்டு வர்த்தகர்களை ஈர்ப்பதற்காக இந்த ஒலி — ஒளிக் கண்காட்சியைப் பத்து லட்ச ரூபாய் செலவில் நிர்மாணித்திருக்கிறோம். அயல்நாடுகளிலிருந்து வரும் பிரமுகர்கள் அத்தனை பேரையும் எல்லாத் தொழிற்சாலைகளுக்கும் அழைத்துச் சென்று காட்டுவது இயலாத காரியம். ஒரே இடத்தில் குறைந்த நேரத்தில் அவர்களுக்கு இந்த ஒலி—ஒளிக் கண்காட்சி மூலம் எல்லாவற்றையும் விளக்கி ஏற்றுமதியை வளர்ப்பதே எங்கள் நோக்கம்!" என்று தெளிவு படுத்தினார் அமால்கமேஷன்ஸ் ஸ்தாபனங்களின் தலைவர் திரு ஏ. சிவசைலம்.

"இந்தக் கண்காட்சியை இத்தனை அற்புதமாகப் படைத்தது யார்?" என்று பத்திரிகை நிருபர்கள் கேட்டனர்.

"இதோ இவர்தான்!" என்று அறிமுகப் படுத்தினார் திரு சிவசைலம், பார்ஸிப் பெண்மணி ஸ்ரீமதி மணிகண்டவாலா அவர்களை.

ஸ்ரீமதி மணிகண்டவாலா தொழிலகத்துக்கு வனப்பூட்டும் கலையில் வல்லுனர். இந்தியாவில் இந்தக் கலையில் (Industrial designing) நாலைந்து பேர்களே ஈடுபட்டுள்ளனர். ஸ்ரீமதி மணிகண்டவாலா பம்பாய் ஜே. ஜே. கலைக் கல்லூரியில் நான்கு வருஷங்கள் பயின்று விசேஷ டிப்ளமா (Applied Arts) வாங்கியவர். புகைப்படக் கலையிலும் தேர்ச்சி பெற்றவர். தொழிலகங்களுக்கு வனப்பூட்டும் கலைத் துறையில் பத்து ஆண்டுகளாக ஈடுபட்டு வருகிறார். பம்பாய், கல்கத்தா எஸ்கார்ட் தொழிலகங்கள் இவரது கைவண்ணம் பெற்றவை. இந்திய விமான ஸ்தாபனத்துக்காகக் காபூலிலும் இலங்கையிலும் அதன் கண்காட்சியை அழகு படுத்தியவர். ஜப்பானில் சமீபத்தில் நடைபெற்ற எக்ஸ்போ கண்காட்சியில் இந்தியன் ஏர்லைன்ஸ் பகுதியைக் கவர்ச்சிகரமாகப் படைத்தவர் ஸ்ரீமதி கண்டவாலா.

இரும்புத் திரை நாடான ரஷ்யாவில் ஹிந்துஸ்தான் ஸ்டாலுக்காகக் கண்கவரும் வண்ணம் கண்காட்சியை அமைத்துத் தந்தவர் இவரே.

"நீங்கள் சென்னையில் வேறு ஏதாவது பணியில் ஈடுபட்டிருக்கிறீர்களா?"

"ஓ! பம்பாயிலிருந்து சிஸ்பரோ பாண்ட்ஸ் நிறுவனம் சென்னையில் கிளை ஸ்தாபனம் நிறுவியபோது அதன் சென்னைத் தொழிலகத்தை அழகுபடுத்தும் பணியை என்னிடம் தந்தார்கள். இயற்கைச் சூழலில் அமர்ந்து பணியாளர்கள் சோர்வில்லாமல் பணி புரியும்படி அதை நிர்மாணித்துக் கொடுத்திருக்கிறேன். சிஸ்பரோ பாண்ட்ஸ் தொழிலகத்தினுள் காஷ்மீரே கொலுவீற்றிருப்பதைக் காணலாம்!" என்று கூறினார் ஸ்ரீமதி கண்டவாலா.

மலேசியாவில் தொழிலகம் அமைக்கும் வாய்ப்பு தமிழகத்தைச் சேர்ந்த தொழிலதிபர் திரு சிவசைலத்துக்குக் கிடைத்திருக்கிறது. ஓர் இந்தியக் கம்பெனியின் கூட்டுறவுடன் மலேசியாவில் அமையவிருக்கும் முதல் தொழிலகம் இதுவே.

"மலேசியாவில் போய்த் தொழிலகம் அமைக்கத் தாங்கள் விழைந்தது ஏன்?" என்று ஒரு நிருபர் கேட்டார்.

"மலேசியாவில் தொழில் துறை வளர்ச்சிக்கு நல்ல வாய்ப்பு இருக்கிறது. மலேசியாவிலிருந்து ஜெர்மனி போன்ற அயல் நாடுகளுக்குக் கச்சாப் பொருள் (Raw Material) அனுப்பும்படி ஒரு கார்டு எழுதினால் போதும், உடனே வந்திறங்கும் வசதி இருக்கிறது. இந்தியாவைப் போல் 'செப்பு நாடா' தொந்தரவு இல்லை. இந்தியத் தொழிலதிபர்களை மலேசிய மந்திரிகள் விருந்துக்கு அழைத்து முதலீடு செய்யும்படி வருந்திக் கேட்கிறார்கள். மலேசியாவில் நாங்கள் தொழிற்சாலை நிறுவுவதற்கான இயந்திரங்கள் விரைவில் கப்பலில் செல்லவிருக்கின்றன!" என்று விளக்கினார் திரு சிவசைலம்.

சின்னஞ் சிறு நாடான ஜப்பானுக்கு அந்நியச் செலாவணி கையிருப்பு ஏகமாகப் பெருகி விட்டதாம். ஆகவே அங்கு தொழிலதிபர்களையும் வர்த்தகர்களையும் "தயவு செய்து ஏற்றுமதி செய்யாதீர்கள்" என்று கேட்டுக் கொள்கிறதாம் அரசு!

அமால்கமேஷன்ஸ் அரங்கைப் பார்வையிட்டுவிட்டு வந்த கையோடு பத்திரிகைகளில் மேற்படி அசாதாரணச் செய்தியைப் படிக்க நேர்ந்தது.

குட்டி ஜப்பானின் அசுர சாதனைக்கு ஈடான சாதனைகளை நாமும் புரிய முடியும்— தேவையற்ற கட்டுப்பாடுகளும் அபரிமிதமான வரி விதிப்பும் இல்லாதிருந்தால் என்பதைத்தான் உணர்த்துகிறது மவுண்ட் ரோட்டில் உள்ள அமால்கமேஷன்ஸ் அரங்கு.

—குண்டுமணி

# சமையல் நேரத்தை மிச்சப் படுத்த இதோ ஒரு வழி!




# டாம்கான் திடீர் புளி

- டாம்கான் உபயோகியுங்கள்-இயற்கைப் புளியின் தூய்மையான சாரம்-உடனடியாக சுவை சேர்க்கும்.
- டாம்கான் மூன்றே செகண்டுகள் போதும்—சுத்தம் செய்து, ஊறவைத்து, பிழிந்து, வடிகட்ட 10 நிமிடங்கள்-ஏன் மேலேகூட ஆகும் கச்சாப்புளியைப் போன்றதல்ல.
- டாம்கான் மிகவும் சுத்தமானது, சுகாதாரமானது—தூசியில்லை, பூச்சிகளில்லை, கொட்டையெடுக்க வேண்டாம். நாருரிக்க வேண்டாம்.
- டாம்கான் இருந்தால்-உங்கள் விரல்களின் அழகைக் கெடுத்துக் கொள்ளவே வேண்டாம்.
- கறிகள், கூட்டுகள், சாம்பார், மிளகுத் தண்ணீர் முதலிய யாவற்றுக்கும் சுவையான புளிப்பைத் தருவது டாம்கான்.
- டாம்கான் மிக சிக்கனமானது-ஒரே தேக்கரண்டி-6 பேர்களுக்-கான உணவுக்கு மணம் சேர்த்துவிடும்.
- 450 மற்றும் 225கிம்-புட்டிகளில் எல்லா கடைகளிலும் கிடைக்கிறது.



மங்களூரில் சமையல் வகுப்புக்கள் நடத்தி வரும் திருமதி அன்னம்மா-பின்ட்டோ கூறுகிறார் ''என் சமையலுக்கு நாவில் நீரூறும் மணம் சேர்க்கிறது டாம்-கான். ஒவ்வொரு இல்லத் தலைவிக்கும் நான் மனமுவந்து சிபாரிசு செய்வது டாம்கான்.''




தயாரிப்பவர்கள்

**ஃபுட் கான்ஸென்ட்ரேட்ஸ் (இந்தியா)**

B-10, இண்டஸ்ட்ரியல் எஸ்டேட், பெங்களூர்-10

Interpub FCI 3A TAM



# சுழிக் காற்று

## அத்தியாயம் பதினெட்டு

இருள்....

கனமான இருள். கண்ணியமற்று மௌனமாக இறுகிக் கிடந்தது அந்த இருள்.

மௌனம்.....

இதயத் துடிப்பை அதிரச் செய்யும் அப்டாடியொரு நிசப்தம். ''தடக்... தடக்...தடக்...தட் தடக்....தட்....'' மஞ்சுளா தன் இதயத் துடிப்பையே அத்தனை துல்லியமாகக் கேட்டாள். அந்த மோன இருளில்.

இருளைக் கீறிக் கொண்டு அவளது நடுங்கும் வளைக்கரம் மெல்லத் துழாவி யது. விநாடிகள் யுகங்களாக வளர்ந்தன.

''கிளிக்...'' — பளீர்!

மஞ்சுளாவின் விரல்கள் இனங் கண்டு கொண்டு மின்விசைப் பொத்தானை அழுத்திவிட்டன. அப்பிக் கிடந்த இருள்

வாரிச் சுருட்டிக் கொண்டு விலகி ஓடி ஒளிந்தது. அந்த வெளிச்சத்தில் சமைய லறை தன் அந்தரங்கத்தை யெல்லாம் காட்டி நின்றது வெட்கமில்லாமல்!

வெறிச்சோடிக் கிடந்த அந்த அறையை விட்டு அடுத்த அறைக்கு ஓடி னாள் மஞ்சுளா. இங்கிருந்து ஓடிப் போய் ,அங்கு ஒளிந்து கொண்டிருந்த இருளை விரட்டித் துரத்த இப்போது அவளுக்கு அத்தனை நடுக்கமில்லை. இதயத் துடிப்பு நின்று நின்று அடித்துக் கொண்டாலும் வெளிச்சத்தில் அவள் கூடவே சேகரும் பின்தொடருவது அவ ளுக்குத் தெம்பாகவும் தைரியமாக வும் இருந்தன.

சமையல் அறையை அடுத்துச் சாப் பாட்டு அறை, அதை அடுத்து, அடுத்து என்று ஒவ்வோர் அறை விளக்கையும் சீண்டி விட்டுக் கொண்டு ஓடினாள் மஞ்சுளா. இருட்டு அவள் விரட்ட லுக்கு அஞ்சி அலறிக் கொண்டுவெளியே ஓடியது. வேப்ப மரத்துப் பங்களாவின் உட்புறம் இருளை வெற்றி கொண்ட களிப்பிலே மின் விளக்குகள் ஒளியைக் கொப்பளிக்க விட்டுக் கும்மாளமிட்ட படி இருந்தன. ஆனால்... ஆனால்... ?

யாருக்காக யாரை எதிர்பார்த்து அப்படி அந்தப் பங்களாவின் விளக்கை யெல்லாம் ஓர் ஆவேசத்தோடு போட் டுக் கொண்டே மஞ்சுளா இங்குமங்கும் ஓடித் தேடினாளோ அந்த ஆளை அங்கு காண வில்லை. மஞ்சுளாவின் பீதி நிறைந்த பார்வை சேகரைக் கவ்விக் கொண்டு நிலைத்தது. வாயோ, ''காளி, காளியப்பா...காளி!'' என்று உரக்கக் கூப்பிட்டுக் கொண்டிருந்தது. ஆனால் அதில் விநாடிக்கு விநாடி ஒருவித நடுக் கம் மட்டும் ஏறிக் கொண்டிருந்தது.

முன்பக்கம் இருந்த கோபால், பெட்டி படுக்கைகளோடு உள்ளே நுழைந்து அவைகளை ஓர் ஓரமாக வைத்து விட்டு மஞ்சுளா சேகரைப் போலவே அவனும் அந்தப் பங்களாவினுள் பரவிக் கிடந்த வெறுமையைப் பார்த்துத் திகைத்துக் கொண்டிருந்தான்.

''வெளியில் போய்ச் சுற்றுச் சூழலை யும் ஆராய்வோம்'' என்றான் சேகர். அவன் மனத்தில் ஏதோ ஒருவித சந் தேகம் உருவாகி யிருப்பதைக் குரலின் உறுதி சொல்லிற்று.

''ஆராயத்தான் வேண்டும்... காளி என்ன ஆனான் என்பதைக் கண்டு பிடிக் கத்தான் வேண்டும். ஆனால் அந்தப் பொறுப்பை என்னிடம் விட்டு விடுங்கள்'' என்றான் கோபால். அதற்கு மேல் அவன் அங்கு நிற்கவில்லை. வயிற்றை எக்கிப் பேண்டை இழுத்து மேலே விட்டுக் கொண்டு, வெளியே சென்று இருளில் கலந்தான். அந்த நிசப்தமான வேளையில் அவனது உறுதி யான பாதங்கள் பதிக்கும் ஒலி துல்லிய மாகக் கேட்டது. சேகர் வலக் கரத்

கௌசிகன்



தால் வாக்கிங் ஸ்டிக்கை அழுத்தி ஊன்றியபடி அதே சமயம் பருந்தைக் கண்டு பதறும் கோழிக் குஞ்சைப் போல் நடுங்கிக் கொண்டு நிற்கும் மஞ்சுளாவை இடக்கரத்தால் அருகே இழுத்துத் தன் உடலோடு ஒட்டினாற் போல அணைத்துக் கொண்டான். தாயின் இறக்கைகளுக்குள் வந்து ஒண்டிக் கொள்ளும் குஞ்சைப் போல மஞ்சுளா சேகரின் உடலோடு ஒட்டிக் கொண்டாள். அப்படியே இருவரும் நடு ஹாலை நோக்கி நடக்கலானார்கள். மஞ்சுளாவின் கரம் சேகரின் இடையை வளைத்துச் சுற்றிக் கொண்டது.

''மஞ்சுளா! உன் தகப்பனாரின் மரணம் இயற்கையானதில்லை; விஷம் விளையாடியிருக்கிறது என்று கேட்டுச் சந்தேகத்தைக் கிளப்பினாயே, அப்படியானால் உன் தகப்பனார் கொலை செய்யப்பட்டிருக்கலாம் என்று நினைக்கிறாயா? அப்படியொரு நம்பிக்கை உனக்கு ஏற்பட்டிருக்கிறதா?'' என்று கேட்டான் சேகர், அவளைத் தன் அருகே சோபாவில் அணைத்தபடி அமர்த்திக்கொண்டே.

''நம்பிக்கை என்று சொல்லவில்லை. ஆனால் எங்கோ எப்படியோ ஏதோ ஒரு பயங்கரம் நடைபெற்றிருக்கிறது. அது என்ன என்பதை நாம் கண்டு பிடித்தாக வேண்டும் சேகர்'' என்றாள் மஞ்சுளா. அவள் குரல் உடைந்து காணப்பட்டது.

''நிச்சயமாக ஏதோ கோளாறு நடந்துதான் இருக்கிறது என்பதை நானும் ஆமோதிக்கிறேன் மஞ்சுளா. அது பயங்கரமான வடிவம் எடுக்கலாம் என்றும் நம்புகிறேன்'' என்றான் சேகர். தன் மார்புமீது அழுந்திக் கிடக்கும் அவள் தலையை வருடி ஆசுவாசப் படுத்தினான்.

மஞ்சுளா சட்டென்று அவன் அணைப்பிலிருந்து விலகினாள்.

''கேட்கிறீர்களா... சேகர்... அந்தக் குரல்......?'' என்றாள் இருள்வெளியை நோக்கியவளாக.

''கோபால் — கோபாலல்லவா கூப்பிடுகிறான்....!'' சேகர் விருட்டென்று எழுந்தான். அதே வேகத்தில் பரபரத்த அவன் கைகள் அருகே இருந்த வாக்கிங் ஸ்டிக்கைத் துழாவ அது வழுக்கித் தரையில் விழுந்தது. குனிந்து அதை எடுத்துக் கொண்டு இரண்டே தாவலில் வாசல் கதவை நோக்கிப் பாய்ந்தான். பரபரப்போடு கதவைப் படீரென்று பரக்கத் திறந்தான். அதே வேளையில் தடதடவென்று யாரோ ஓடும் காலடி ஓசை. புல் தரை மீது ஓடும் காலடிகள்.... காய்ந்த சருகுகள் நொறுங்கும் ஒலி... தடுமாற்றத்தோடு, அலங்கோலமாக, முறையற்று ஓடும் பாதங்கள்.... ஒருவரா — பலரா?

ஊகிக்க முடியவில்லை.

தூரத்தில் கோபாலின் குரல்.....

''சேகர்.... சேகர்... சீக்கிரம்....''

அவன் குரலில் ஒரு தவிப்பு, அசாதாரணமானதோர் அவசரம்.

''கோபால், இதோ வந்து கொண்டிருக்கிறேன்.'' சேகருக்கு முன்னால் ஓடினாள் மஞ்சுளா. வராந்தா விளக்கின் மங்கிய ஒளி பங்களாவின் முன்னால் மண்டிக் கிடக்கும் இருளோடு போராடித் தோற்றுக் கொண்டிருந்தது. ஆனால் அது மஞ்சுளாவுக்குப் போதுமானதாக இருந்தது; குரல் வந்த திசையைக் குறி வைத்துப் போக.

முட்செடிப் புதர் ஒன்றில் பரிதாபமாக விழுந்து கிடந்தான் கோபால். எழுந்திருக்கப் பெரு முயற்சி செய்து

கொண்டு தத்தளித்துக் கொண்டிருந்த அவனுக்குக் கைகொடுத்தாள் மஞ்சுளா. அவன் கரம் பற்றிக் கொண்டு ஓர் உந்தலில் அதிலிருந்து எழுந்து நின்றான் கோபால்.

மங்கிய நிலவொளியில் மிக அருகே அவனைக் கண்ட மஞ்சுளா பதறிப் போனாள். ''கோபால், ரத்தம்.... ஐயோ! உன் முகத்தில் ரத்தம்!''

கோபால் தன் பாண்ட் பாக்கெட்டிலிருந்து மடித்த வெள்ளைக் கைக் குட்டையை எடுத்து வலக் கண்ணுக்கு மேலே ஒற்றினான். வெண்மையில் சிவப்புப் பளிச்சிட்டது. வலது நெற்றிப் பொட்டுக்கு அருகே பொத்துக் கொண்டு ரத்தம் வழிந்தது. அதே போல் மூக்கிலிருந்தும் ரத்தம் ஒழுகியது.

இதற்குள் அருகில் வந்துவிட்ட சேகர் மரக் கிளைகளின் ஊடாக ஒழுகிப் பரந்திருந்த ஒரு பெரிய நிலவொளித் துண்டுக்குக் கோபாலை இழுத்துக் கொண்டு போனான் - அவன் காயங்களின் தன்மையைக் கண்டறிவதற்காக.

''யாராவது உன்னைத் தாக்கினார்களா கோபால்?'' பரிவும் பீதியுமாகக் கேட்டாள் மஞ்சுளா.

''நான் தாக்கப்பட்டேன்.... மோசமாக'' என்றான் கோபால்.

''உன்னைத் தாக்கியது காளியப்பன் இல்லையே?''

''இல்லவே இல்லை. இருக்கவும் முடியாது....'' மூக்கில் குறுகுறுத்த ரத்த ஒழுகலை மறுபடியும் கைக் குட்டையில் ஏந்தி ஒற்றியபடி தொடர்ந்தான் கோபால். ''அதோ அங்கே, இந்தப் பண்ணையின் கல்லறை (புதையிடம்) இருக்கிறதே, அந்தப் பக்கமாக ஒருவனை வழிமறித்தேன். என் பிடிக்கு அகப்படாமல் என்னைத் தாக்கிவிட்டு அவன் ஓடி விட்டான். நாம் உடனே இந்தப் பகுதியைச் சூழ்ந்து சோதனையிட்டால் அவன் அங்கிருந்து நழுவித் தப்புவதற்குள் பிடித்து விடலாம்.''

''சேகர், கோபாலோடு நீங்களும் அந்தக் காரியத்தில் ஈடுபடுங்கள். நான் போய் ஒரு டார்ச் விளக்கோடு வருகிறேன்'' என்று கூறியபடி வேப்ப மரத்துப் பங்களாவை நோக்கி ஓடினாள் மஞ்சுளா.

கோபால் கைக் குட்டையைப் பிரித்து மறுபடியும் அதைத் திருப்பி மடித்து எரிச்சலெடுக்கும் காயத்தின் மீது அழுத்திக் கொண்டே கல்லறைப் பகுதியை நோக்கி நடக்கலானான். அவன் தோள் மீது கையைப் போட்டுக் கொண்டு சேகர் அவனைப் பின்தொடர்ந்தான்.

குவிந்திருந்த மண் சிதறிக் கிடந்த இடம், 'இங்குதான் தாக்குதல் நடந்தது' என்பதைக் கூறிக் கொண்டிருந்தது. அதன் அருகே சவத்தைப் புதைப்பதற்காக வெட்டப்பட்ட புதைகுழி.

ஓர் ஒளிக் கற்றை பரபரப்புடன் இவர்களை நோக்கி ஓடி வந்து கொண்டிருந்தது. போன அதே வேகத்துடன் டார்ச் விளக்கோடு விரைந்து கொண்டிருந்தாள் மஞ்சுளா.

சற்றைக்கெல்லாம் விம்மித் தணியும் இதயத்தையும், வேக வேகமாக மூச்சு விடுவதினால் ஏற்படும் கதகதப்பையும் சேகரின் முதுகு உணர்ந்தது. பின்பக்கத்திலிருந்து அவன் முன்னால் 'டார்ச் விளக்கு' நீண்டது. தன் மீது சரியும் கனத்தைத் தாங்கிக் கொள்ளக் கால்களை அழுத்தி ஊன்றி, வாக்கிங் ஸ்டிக் பிடியிலும் உறுதியை அதிகமாக்கிக் கொண்டான் சேகர்.

டார்ச் விளக்கின் சுழல் ஒளி புதை குழியினுள் சுழன்று வந்தது.

''கோபால், ஏதாவது தெரிகிறதா?'' சேகர் கேட்டான்.

''ஒன்றுமில்லை, சேகர்.... காலியான புதைகுழி.''

''காலியானதுதான். ஆனால் வேலப்பன் விட்டுச் சென்றபடி இல்லை இது. சில காலடிகள் அதன் அடியில் தெரிகின்றன'' என்றான் சேகர். அவன் பின்னாலிருந்து தோள் வழியாக மஞ்சுளாவின் தலை எட்டிப் பார்த்துவிட்டு, ''ஆமாம் சேகர்'' என்றது. ஓடி வந்த இரைப்புச் சற்றுத் தணிந்திருந்தது அவளிடம்.

''வேலப்பனின் பாதங்களை நான் கவனித்தேன். அவை சிறியவை. தவிர அவன் முரட்டுச் செருப்பு அணிந்திருந்தான். இந்த அடையாளங்களோ பெரிய பாதச் சுவடுகள். காலில் அணிந்திருப்பது உயர் ரகச் செருப்பினுடையவை.''

சேகர் மஞ்சுளாவுக்கு விளக்கிக் கொண்டிருக்கும் போது கோபாலின் குரல் சற்றுத் தொலைவில் கேட்டது.

''சேகர், இதோ பார்த்தாயா?''

ஒற்றையடிப் பாதையோரத்துப் புல்வெளியின் மீது சேகருக்கு எதையோ சுட்டிக் காட்டினான் கோபால். சேகர் அதைக் குனிந்து எடுத்து டார்ச் விளக்கொளியில் பார்த்தான். ஒளி வெள்ளத்தில் அது பளபளத்தது. அது ஒரு சாவிக்கொத்து. அதில் மூன்று சாவிகள் இருந்தன.

''இதில் இரண்டு ஏதோ ஒரு வீட்டின் வாயில் பூட்டைத் திறக்கும் சாவிகள். மற்றொன்று?'' என்று வினா எழுப்பிய சேகருக்கு மஞ்சுளாவிடமிருந்து பதில் வந்தது.

''அந்த மூன்றாவது சாவி காளியப்பனுடைய டாக்சியின் சாவி—இக்னிஷன் கீ''

**இயற்கையின் படைப்போ, மாந்தரின் கண்டு**
**பிடிப்போ-எதையும் பக்குவமாக-பாக் செய்யவே,**
**ஆந்திரப் பிரதேஷ் க்ராப்ட் பேப்பர்**



ஆந்திரப் பிரதேஷ் பேப்பர் மில்ஸ்

# கனகச்சிதம், பாதுகாப்பு !





# உங்களால் ஊகிக்க முடியுமா இப் பெண்மணியின் வயதை?

30 வயதைத் தாண்டிவிட்டீர்களானால், உடம்பை வடிவு மாறாத இளமைப் பொலிவுடன் வைத்திருக்கத் தேவைப்படும். இரண்டொரு இழைகள் நரைமயிர் தலைகாட்டினாலே உங்கள் முயற்சிகள் எல்லாம் வீணாகிவிடும்.

**இளமைப் பொலிவை மீட்பது எவ்வாறு?**

சற்றே நரை தலைகாட்டினாலும் உடனே கேசத்திற்கு சாயமிட்டுவிடுங்கள். நரைமயிர் உங்களைக் காட்டிக் கொடுக்கும் வரை காத்திருக்காதீர்கள். கேச சாயம் இட்டுக்கொள்வதில் சங்கடப்பட ஏதுமில்லை. நாலு பேருக்கு நடுவில் நன் மதிப்பு உண்டு. இதோ, உங்கள் வயது தெரியாமல் வருடங்களைக் குறைத்துக் காட்டும் நிரந்தரக் கேச சாயம்— அநாயாசமாக உங்கள் வீட்டுக்குள்ளேயே உபயோகிக்க முடியும். அதுதான் பிளாக் மாஜிக் லிக்விட் ஹேர் டைய். தனி முறைப்படி ஆக்கம் பெற்றது, எல் வகையான கேசத்தின் மீதும் இட்டுப் பரிசோதிக்கப்பட்டது. ஐரோப்பாவிலிருந்து அண்மைக்காலத்திலே வெற்றிச் சிகரமாக வெளி-வந்த கேச சாயத் தயாரிப்பு முறை. 30 நிமிடங்கள் தான் ஆகும், பிளாக் மாஜிக் லிக்விட் ஹேர் டைய் கொண்டு உங்கள் கேசத்திற்குச் சாயமிட்டு முடிக்க. அதற்குப் பிறகோ காலப் போக்கிலே அவ்வப்போது மயிர்க்கால்களிலே தடவி விட்டாலே போதும்; இட ஒரு சில நிமிடங்களேதான் ஆகும். பலன்களோ தப்பவே தப்பாதவை.

**பிளாக் மாஜிக் நிரந்தரப் பண்புக்கு ஒரு பதம்பார்ப்பு.**

முதலில், உங்கள் கேசத்திற்கு பிளாக் மாஜிக் சாய-மிடவும். அடுத்து ஷாம்பு செய்க. பாருங்களேன் பலன்களை : அற்புதமான இயற்கை வண்ணத்தோடு மிளிரும் உங்கள் கேசம். அதன் பிறகு, எத்தனை தடவைகள் வேண்டுமானாலும் கேசத்தை நீங்கள் கழுவலாம். பிளாக் மாஜிக் வழங்கும் கேசக் கருநிறம் நிரந்தரம் தான்.

**உங்கள் கேச நலனை இயற்கைப் பொலிவுடன் போற்றும் தனிப் பார்முலா உடையது பிளாக் மாஜிக்.**

பிளாக் மாஜிக் என்பது வெறும் கேசச் சாயம் அல்ல. அதற்கும் மேல் சோதனைகளில் தேறிவந்த அதன் ஆக்க முறையின் தனிப்பெருமை : உங்கள் கேசத்திற்கு ஆரோக்கியம், மென்மையம், படிமானப் பண்பு. இயற்கை நியதிப்படியே இயல்பான கேசப் பொலிவை இவ்வளவு நன்மைகளோடும் உங்களுக்கு வழங்குகிறது!

**பிளாக் மாஜிக்**




2 சைஸ்களிலே கிடைக்கிறது, எல்லா முக்கிய ரீடெய்ல் கடைகளிலும்.

பிளாக் மாஜிக் பர்மனென்ட் லிக்விட் ஹேர் டைய்

Interpub/CCI/1 TM

''அப்படியானால்....?'' கோபால் பேசினான்.

''இந்தப் புதைகுழிப் பக்கம் காளி வந்திருக்க வேண்டும். தன் சாவியை இங்கு தவறவிட்டிருக்கிறான். ஆனால் நான் மோதியது காளியோடு இல்லையே. நிச்சயமாகச் சொல்லுவேன், இருட்டானாலும்கூட. நான் தாக்கப்பட்டது காளியால் அல்ல.''

''வீட்டைத் திறக்கும் சாவிகள் இரண்டில் ஒன்று காளியின் இருப்பிடமான அவன் அறையைத் திறப்பதற்காக இருக்கலாம். ஆனால் வீட்டின் தலைவாசலைத் திறக்கும் மற்றொரு சாவி காளிக்குத் தேவையில்லையே ! இது எதற்கு? எந்தக் கதவுக்கு இந்தச் சாவி சேரும்?'' சேகர் தனக்குத் தானே வினா எழுப்பிக் கொண்டு விடை காண முற்பட்ட அதே சமயத்தில் மஞ்சுளாவின் நடுங்கும் விரல்கள் சேகரிடமிருந்து அந்தச் சாவிக் கொத்தை வாங்கிக் கொண்டன. சேகர் 'டார்ச்' விளக்கின்ஒளியை அதன்மீது வழிய விட்டான். இடது உள்ளங்கையில் உள்ள அந்த மூன்று சாவிகளை மஞ்சுளாவின் வலக்கரத்தின் விரல்கள் வாஞ்சையோடு தடவிக் கொடுத்தன. அவள் கைமட்டுமல்ல. உள்ளமே நடுங்கிற்று. அவைகளில் ஒரு சாவி அவளுக்கு மிக மிகப் பழக்கப்பட்டது.

'' சேகர் வேண்டாம்... அப்படி இருக்கக் கூடாது. நான் அம்மாதிரி ஊகிக்க விரும்பவில்லை.'' மஞ்சுளாவின் குரல் ஏன் இப்படி நடுங்க வேண்டும்?

சேகர் 'டார்ச்சை' அவள் முகத்துக்குத் திருப்பினான். மஞ்சுளா 'கோ' வென்று அழுதுவிடுவாள் போலிருந்தது. அவள் எதை எண்ணி நடுங்கினாளோ, எதைச் சொல்ல விரும்பவில்லையோ அதை அவன் புரிந்து கொண்டான்.

எந்த நிமிடமும் அவள் கரத்திலிருந்து விழுவது போலிருந்த அந்தச் சாவிக் கொத்தை வாங்கிக் கொண்டு அவள் கரத்தை ஆதுரத்தோடு பிடித்து அழுத்தி அதன் நடுக்கத்தைத் தணிக்க முயன்றான் சேகர்.

''அதையும் பார்த்துவிடலாம் மஞ்சு இப்போதே...!'' என்றபடி அவள் கரத்தைப் பற்றித் தன்னுடன் சேர்த்து அணைத்துக் கொண்டே திராட்சைக் கொடி வீட்டுக்குச் செல்லும் ஒற்றையடிப் பாதையில் இறங்கி வேகமாக நடக்கலானான்.

கோபாலுக்கு ஏதோ புரிவது போலிருந்தது. ஆனால் புரியவும் இல்லை. எப்போதுமே குழப்பிக்கொள்ள விரும்



பாதவன் அவன். ஆகவே அவர்களைத் தொடர்ந்து அவனும் நடக்கலானான்.

திராட்சைக் கொடி வீட்டின் தலைவாசலில் போய் நின்றதும் சேகர் தன்னிடமிருந்த டார்ச் விளக்கைக் கோபாலிடம் கொடுத்தபோது அவன் நோக்கம் என்ன என்பதை ஒரு நொடியில் புரிந்து கொண்டான் கோபால். பொத்தானை அழுத்தி மின் ஒளியைக் கதவின் சாவித் துவாரத்துக்கு நேராகப் பாய்ச்சினான். சேகர் வாசல் கதவுச் சாவிகளில் ஒன்றை அந்தக் கதவுத் துவாரத்தில் பொருத்தித் திருப்பினான். அது செயல்படவில்லை. அது சரியாக இருக்காது என்று சேகருக்கும் தெரியும். மஞ்சுளாவின் உள்ளத்தை நடுங்க வைத்தது இன்னொரு சாவிதான். சேகர் அதை முயற்சி செய்யும்போது மஞ்சுளாவுக்கு மூச்சே நின்றுவிட்டது போல் நெஞ்சு தவித்தது.

''கிளிக்...!'' சாவிக்கு இணங்கியது பூட்டு; லீவர் நகர்ந்து வழி கொடுத்தது. எந்தக் கதவைத் திறக்க முடியாமல் தோல்வி கண்டார்களோ அந்தக் கதவு இப்போது திறந்து கொண்டது!

''என்னால் நம்பவே முடியவில்லை, சேகர்!'' குளிரில் நடுங்குவது போல் ஒலித்தது மஞ்சுளாவினுடைய குரல். சேகரின் கவனம் இப்போது அந்தக் கதவின் மீதுதான் பதிந்திருந்தது. நிதானமாக அதைத் தன் வாக்கிங் ஸ்டிக்கினால் தள்ளினான்.

''கிரீச்... கிக்...கிர்...ரீச்...'' அந்த வேளையில் விகாரமாக விபரீதமாக அவ்வொலியைக் கதவு எழுப்பியது. திராட்சைக் கொடி வீட்டினுள் மின் விசைப் பொத்தான்கள் இருக்குமிடம் மஞ்சுளாவுக்குத் தெரியுமே! அவள் கைகள் இயங்கியபோது இரு மேஜை விளக்குகள் ஏககாலத்தில் பளீரிட்டன.

அதே சமயம் இன்னொரு அதிசயமும் நிகழ்ந்தது.

''அதோ!'' கோபால்தான் குரல் கொடுத்தான். ''அதே சத்தம். நாம் வெளியிலிருந்து கேட்டோமே அதே ஓசை. ஏதோ ஒரு மோட்டார் இயங்கும் ஒலி. ...அடுத்த அறையிலிருந்து தான் அந்தச் சத்தம் வருகிறது.''

''அது சமையல் அறை'' என்றாள் மஞ்சுளா.

அந்த அறைக் கதவைப் பரக்கத் திறந்தபோது அங்கு ஒரு பெரிய குளிர் பதனப் பெட்டி இவர்களை வரவேற்கத் திறந்து கிடந்தது — காலியாக. பிரும் மாண்டமான ரெப்ரிஜிரேடர். வியா பார நிலையங்களுக்கே பயன்படக்கூடிய வகையில் நிர்மாணிக்கப்பட்ட பிரத்தி யேகமான பெரிய அளவில் காட்சியளித் தது அந்த பிரிஜ். எடுத்துப் பொருத் தக்கூடிய ஷெல்புகள்கூட அகற்றப்பட்டி ருந்தன. அது இயங்கிய ஒலிதானா அது? அதன் அருகே கிடந்ததொரு மேஜைமீது அதன் தட்டுக்கள் கழற்றிக் குவிக்கப் பட்டிருந்தன. திறந்து கிடந்த அந்த 'பிரிஜ்'ஜைச் சேகர் மூடி விட்டு அதையே சில விநாடிகள் பார்த்துக் கொண்டு நின்றான்.

''பிரிட்டிஷ் அரசாங்கமே அமைத்துக் கொடுத்த விசேஷமான குளிர்பதனப் பெட்டி இது. ராணுவத்துக்கான காய் கறி, இறைச்சி ஆகியவைகளைச் சேமித் துக் கெடாமல் அனுப்புவதற்காக அந் தக் காலத்தில் பயன்பட்டதாம் இது.''

மஞ்சுளா பிரதான பங்களாவின் சமையலறையில் விவரித்த வாசகங்கள் நினைவுக்கு வந்தன சேகருக்கு. அவன் மூளை படுவேகமாக இயங்கிக் கொண்டி ருந்தது. அடுத்துள்ள ஒரு சிறு அறையில் ஒரு வெந்நீர்ப் பாய்லர். அதன் அருகே ஓர் இரும்புக் கம்பி. பாய்லர் குழாய்க் குள் ஏற்படும் அடைப்பைக் குத்திச் சரிப் படுத்தப் பயன்படும் சாதனம் அது. சட்டென்று அவன் கவனம் ஏனோ அதில் தாவியது. அதைக் கையில் எடுத்து ஒரு முனையை ஆராய்ந்த அவன் தலை ஏதோ முடிவோடு இலேசாக ஆமோ தித்து ஆடியது.

''அது...அதில் எதைக் காண்கி றீர்கள் அப்படி... சேகர்?'' — மஞ்சுளா.

''காரியின் டாங்கியில் — எஞ்சினைக் கிளப்பும் இரும்புக் கம்பியில் என்ன பார்த்தாய்? அதை இந்தக் கம்பியில் இன்னும் அதிகமாகக் காண்கிறேன்'' என்றான் சேகர்.

''சேகர்...!''

சேகர் அந்தக் கம்பியை அதன் இடத்தில் முன்போலவே வைத்தான். பிறகு...? ஒரு மூலையில் சில பழஞ் சாக்குகள் கிடந்தன. அவைகளைத் தன் கைத்தடியினால் கொந்தி அகற்றினான். ஒன்று இரண்டு... இன்னும் சில...அதன் கீழே தரையில்... கரேலென்று. அது என்ன?

''ரத்தம்... இன்னும் அதிகமான ரத் தக் கறைகள்...!'' மஞ்சுளா பதறிப் போய்க் கூவினாள்.

சேகர் ஓர் இடைகழி வழியே அடுத் திருந்ததோர் அறைக்குப் போனான். அங்கிருந்து இன்னொரு அறைக்கு அழைத்துப் போயிற்று வழி. அது ஒரு படுக்கை அறைதானா? அப்படித்தான் இருக்க வேண்டும். இல்லாவிடில் அங்கு படுக்கைகள் — மெத்தை போட்ட கட்டில்கள் இருப்பானேன்? அந்தப் படுக் கையில் ஒரு மனிதன் நீட்டிப் படுத் துக் கிடந்ததற்கான அடையாளம் பதிந்து காணப்பட்டது. ஈரமான உடலோடு படுத்திருந்தால் எப்படிப் படுக்கையில் நீர்த் திவலைகள் அடை யாளமிடுமோ அப்படி வரை படமாக அடையாளம் — உலர்ந்தும் உலராத நிலையில். ஈரமான டர்க்கி டவல்கள் அருகிலிருந்த நாற்காலிகளில் வீசி எறி யப்பட்டிருந்தன. தரையும் ஈரமாக இருந்தது. அதன் உண்மையை, நிதரி சனத்தை ஊர்ஜிதப்படுத்திக் கொள்ளச் சேகர் குனிந்து விரல்களால் அதைத் தொட்டுப் பார்த்தான்.

மறுபடியும் அவன் அந்தக் கூடத்தின் நடுவே வந்து நின்றபோது மௌனமாக மஞ்சுளாவும் கோபாலும் கூடவே வந்து அவன் கூறப்போவதை எதிர்பார்த்துக் காத்திருந்தார்கள் தவிப்புடன். ஆனால் சேகர் பேசவே யில்லை. அங்கு நின்றபடி சுற்று முற்றும் அந்தக் கட்டிடத்தைத் ஆராய்ந்தது அவன் பார்வை. உயர மான கட்டிடம் அது. அவன் நின் றிருந்த அந்தக் கூடத்திலிருந்து ஒரு நாலைந்து படிகள் கீழிறங்கின. நில வறை என்று சொல்ல முடியாது. ஆனால் சற்றுத் தாழ்வானதோர் இருப்பிடத் துக்கு அப்படிகள் இட்டுச் சென்றன. அதில் இரண்டு படிகள் இறங்கிய சேகர் ஏதோ நினைத்துக் கொண்டவனாகச் சட்டென்று நின்று திரும்பினான். அண்ணாந்து பார்த்தபோது மாடிக்குச் செல்லும் படிகள் மீது அவன் பார்வை பதிந்தது. நாகரிக மோஸ்தரிலான மாடி அறைகளைக் கொண்டிருக்கவில்லை அந் தக் கட்டிடம். பத்துப் பதினைந்து படி களுக்குப் பிறகு இன்னும் சற்று உயர்ந்த மட்டத்தில் சில அறைகளைக் கொண்டி ருந்தது. அது ஒரு விசித்திரமான விடுதிதான்.

''சேகர்....'' ஒருவித பீதியோடு வின வினாள் மஞ்சுளா: ''நீங்கள் எதையோ இங்கு எதிர்பார்க்கிறீர்கள் இல்லையா?''

(தொடரும்)

# உங்களுக்கு சொந்தமாக ஒரு வீடு



## யுகோ பாங்கின் வீடு கட்டுவதற்கான ரெக்கரிங் டிபாஸிட் திட்டம்

நீங்கள் இனி சொந்தமாக ஒரு வீடு கட்டிக்கொள்ளலாம். யுகோ பாங்கின் வீடு கட்டுவதற்கான ரெக்கரிங் டிபாஸிட் திட்டம் அதற்கு வகை செய்கிறது. இத்திட்டத்தின் கீழ் நீங்கள் செய்யவேண்டியதெல்லாம் 48, 60, 72, அல்லது 84 மாதங்கள் என ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு யுகோ பாங்கில் வீடு கட்டுவதற்கான ரெக்கரிங் டிபாஸிட் கணக்கு ஒன்றைத் திறப்பதேயாகும். நிர்ணயிக்கப்பட்ட கால கட்டத்தின் முடிவில் ஒரு கணிசமான தொகையை நீங்கள் கடனாகப் பெறலாம். அதைக்கொண்டு நீங்கள் சொந்தமாக ஒரு வீடு கட்டிக் கொள்ள முடியும்.

நிரந்தரமான வேலை செய்யும் நபர்கள் மற்றும் நிரந்தர வருமானம் தரக்கூடிய ஒரு தொழில் செய்து வருபவர்கள் மட்டுமே இத்திட்டத்தில் சேர தகுதியுள்ளவர்களாவார்கள்.




தலைமை ஆபீஸ்: கல்கத்தா

UCO-6/71




மாசிலாமணி இடைவேளை டிபனுக்காக ஆபீஸிலிருந்து வந்திருந்தார். அவரது மனைவி காயத்ரி டைனிங் டேபிளில் சிற்றுண்டியை வைத்தபடி இன்னொரு நாற்காலியை இழுத்துப் போட்டுக்கொண்டு பேச ஆரம்பித்தாள்.

''காலையில் சாரதா வந்திருந்தாள். ஒரு வாரமாக அவளது கணவன் வீட்டுக்கு வரவே இல்லையாம்''...

'''ஹூம்...''

''உம்மென்று விட்டேத்தியாகப் பேசினால் எப்படி? உங்கள் நண்பர் அவர். சின்ன வயசிலேந்து ஒரே பாயிலே உருண்டு, கல்லூரிவரை ஒண்ணாப் படிச்சோம்னு நீங்கதானே அடிக்கடி சொல்லுவீங்க... உங்க அருமையான நண்பரைப் பத்தி ஹூம்... பதினைந்து வருஷங்கள் குடித்தனம் நடத்தி, மணியா இரண்டு பெண்கள் வேறே. மனுஷனுக்கு இப்படிப் புத்தி போகுமா? என்னமோ சினிமாவில் வர்ற மாதிரி 'என்னை மறந்துடுன்னு' சொல்லிட்டுப் போயிட்டாராமே!..''

''என்னை என்ன பண்ணச் சொல்றே? நான் அவனைப் பார்த்தே ஒரு மாசம் ஆயிடுச்சு.''

''அவருக்குப் போன் பண்ணிப் பாருங்க. இல்லாட்டி நேரிலே பார்த்து 'என்ன சமாசாரம்னு' கேளுங்கோ. சாரதா மூக்கைச் சிந்திக்கிட்டு நிக்குது...''

''இந்த பாரு, இது அவங்க அவங்க குடும்ப சமாசாரம்; தாம்பத்ய விஷயம். இதுலே நாம தலையிடறது தப்பு. இன்னிக்குச் சண்டை போட்டுக்குவாங்க. நாளைக்கு அவங்களே 'ஸால்வ்' செய்துப் பாங்க.''

''உங்க பிரசங்கத்தைக் கேட்க நான் தயாராயில்லே. லக்ஷ்மி மாதிரி அந்தப் பொண்ணு கண்ணீர் விடுது. அதன் முகத்துக்காகச் சொல்றேன்... இன்னிக்கு முடிவாகக் கேட்டுக்கிட்டு வாங்க...''

''ஆல் ரைட், ஆல் ரைட்...!''

மாசிலாமணி ஒரு விளம்பர ஏஜென்ஸியில் எக்ஸிக்யூடிவ் பதவியில் இருந்தார். நான்கு ஸ்தான சம்பளம். குளிர் சாதன இயந்திரம் பொருத்திய காபினில் மஹோகனி மேஜையின் முன் உயரமான முதுகை உடைய சுழலும் நாற்காலியில் அமர்ந்தபடி சில விளம்பர 'லே - அவுட்'களைப் பார்வையிட்டுக் கொண்டிருந்தார். அதிலிருந்த மாடல் பெண்

மணியின் உருவம் அரையும் குறையுமாகச் சேலை உடுத்தி இருந்தது. ஆடையின் பெருமையை விட அங்க எழில்தான் 'போல்டாக' இருந்தது. அந்த விளம்பரம் ஒரு நெசவாலைக் கம்பெனியின் நைலான் சேலைக் குரியது.

இன்றைய விளம்பரப் போக்கு அப்படி — மாசிலாமணி சிரித்துக்கொண்டார். அவரது நண்பன் செல்வராஜின் நிலைமைகூட இன்றைய நாகரிக ஓட்டத்தைத்தான் குறிக்கிறதோ?

காரியதரிசி மிஸஸ் அகஸ்டின் நேற்று 'டிக்டேட்' செய்யப்பட்ட கடிதங்களை அழகாய் டைப் அடித்துக் கையெழுத்துக்குக் கொண்டு வந்தாள். அவள் நுழையு முன்னே அவளது ஸெண்டின் நெடி வந்தது.

அவள் காதல் நாடகம் புரிந்தது ஒரு கணக்கனுடன்; கல்யாணம் செய்து கொண்டது ஒரு விற்பனைப் பிரதிநிதியை; அவனை விவாகரத்து செய்து இன்று வாழ்க்கை நடத்துவது ஒரு காமிரா மேனுடன்! அதுவும் இரண்டு குழந்தைகளைப் பெற்ற பின்.

''கன்கிராஜுலேஷன்ஸ்'' என்றாள் அகஸ்டின் விஷமச் சிரிப்புடன்.

''என்ன விஷயம்?''

''ஒரு நளினமான பெண்ணின் பாராட்டு உங்களுக்குக் கிடைத்திருக்கிறது. நிஜமாகத்தான் சார்! புதிதாக வந்திருக்கிறாளே ஆர்டிஸ்ட் பிஜிலாவதி, அவள் 'சபாஷ்' முகப் பவுடர் சம்பந்தமாக நீங்கள் தயாரித்த விளம்பர வாசகங்களைப் படித்துவிட்டுப் பாராட்டினாள்.''

''சபாஷ்!''

ஸெண்டின் மணம் மறைந்துவிட்டது. ஆனால் மாசிலாமணியின் மனம் புகழ்ச்சி வாசனையை நுகர்ந்து கொண்டிருந்தது. ஓர் இளம் பெண் பாராட்டினாள் என்ற நினைவு எவ்வளவு கிளர்ச்சியை — அதிலும் இந்த வயதில் உண்டாக்கு

அட்டைப்படக் கதை

கிறது! அவள் கலைத்திறம் கொண்ட ஓவியப் பெண். அவள் வரைந்த சித்திரம் அவர் முன் கிடந்தது. அந்த டிசைனில் பிஜிலானியின் கைவண்ணத்தைக் கண்டார். இறுகப் பிடித்த மார்புக் கச்சை போன்ற அரை மீட்டர் ரவிக்கை; சமீபகாலமாக, சற்றுத் தாழ்த்திக் கட்டுவதால் சருமத்தில் இரு நிறம் காட்டும் சதைப் பற்று மிக்க இடுப்பு; நடையிலே ரிதம்; உடலிலே வாளிப்பு; மேனி எங்கும் தங்கச் சாந்து. — இதுதான் பிஜிலானி.

எழுந்து அறையை விட்டு வெளியே சென்று ஒரு முறை அவளைக் கண்ணாரக் கண்டு வரலாம் போன்ற உந்தல். கண்ணியம் கட்டுப்படுத்தியது.

மூன்று முறை முயன்று செல்வராஜை டெலிபோனில் பிடித்து விட்டார், மாசிலாமணி. நுரை ரப்பர் பொருள்கள் தயாரிக்கும் ஸ்தாபனம் ஒன்றில் இன்ஜினியர் அவன். அவன் குறிப்பிட்ட நேரத்துக்கு அவனைக் காணச் சென்றார் மாசிலாமணி.

எப்படிப் பேச்சைத் தொடங்குவது என்று அவர் தயங்கியபோது செல்வமே தொடங்கினான்:

''சாரதா வந்து ஒரேயடியாக அழுதிருப்பாள். என்னை ஒரேயடியாகக் குறைகூறியிருப்பாளே!''

''அப்படி இல்லை. என் துணைவி காயத்ரியிடம் வந்து ரொம்ப வருத்தப்பட்டிருக்கிறாள்.''

''மாசில்! யார் எப்படி வேண்டுமானாலும் பேசிக் கொள்ளட்டும். நான் மனத்திலே ஒன்றைக் கொண்டு வெளியிலே வேறொரு வேஷம் போடத் தயாராக இல்லை. மார்பு வலி சம்பந்தமாக ஆஸ்பத்திரியில் படுத்துக் கிடந்தேனே? அப்போது எனக்கு யாரைப் பார்த்தாலும், எதை நோக்கினாலும் வெறுப்பாக இருந்தது. நான் செத்துக் கொண்டிருந்த உணர்ச்சிதான் மேலோங்கி நின்றது. நான் வாழ்ந்த வாழ்க்கையே ஒரு 'மெஸ்' போலத் தோன்றியது. ஒரே மனக் கஷ்டம்!

''அப்பொழுதுதான் அந்த நர்ஸ் வந்தாள். அவளது பணிவிடையும் உபசாரமும் என்னைப் பரவசப்படுத்தின; மன வீழ்ச்சியின் ஆழத்திலிருந்து என்னைக் காப்பாற்றின. அவள் எனக்கு 'ஸ்பாஞ்ச் பாத்' அளிக்கையில் அவளது ஸ்பரிசத்தை எனது தோள் மட்டும் உணரவில்லை. அதற்குக் கீழ் உள்ள தசையும் நரம்புங்கூட உணர்ந்து கிளர்ந்தன...''

''நீ சாரதாவைக் காதலித்துத்தானே திருமணம் செய்து கொண்டாய்? பொம்மை போல் இரு குழந்தைகள். வெற்றி வாழ்க்கை என்று கணக்குப் போடக்கூடிய உத்யோகம்... நீ திருப்தியான வாழ்க்கைதான் வாழ்கிறாய் என்று எண்ணினேனே?''

''திருப்தியாகத்தான் இருந்தது, ஆரம்பத்தில். என்னைவிட ஆறு மாதங்கள் சிறியவளை மணந்து கொண்டது தவறு. வயது வித்தியாசம் இன்னும் அதிகமாக இருக்க வேண்டும். பெண்கள் ஆண்களை விட மிக வேகமாக மூப்பை அடைகிறார்கள். ஒரு குழந்தையைப் பெற்ற பிறகு அவளுக்கு மளமளவென்று வயது ஏறி விட்டது. சமீப காலமாக எனது தாம்பத்ய உறவு வெறும் 'மெகானிகல்' ஆக இருந்து வருகிறது. எனக்கே சப்பிட்டு விட்டது. எதற்காகச் சிரிக்கிறாய்?''

''சிரிக்கவில்லை. சிந்திக்கிறேன். வாலிபம் முடிந்து நீ தகப்பனாகி விட்ட பிறகு உனக்குச் சில கடமைகள், பொறுப்புக்கள் இருக்கின்றன என்பதை உணரவில்லையா?''

''அதில்தான் போலித்தனம் நிறைந்திருக்கிறது. தந்தை ஸ்தானம் வந்துவிட்டால் வாலிபம் மறைந்துவிடும் என்று கூற முடியுமா? என் மனம் வேதாளமாகவே இருந்து கொண்டிருக்கிறது. சமூகத்துக்கு நான் நேர்மையானவனாக, பண்பாளனாகக் காட்சி அளிக்கிறேன். ஆனால் எனது அந்தரங்கம் எப்படி இருக்கிறது? தெருவில் நடக்கும் ஒரு பெண்ணின் இடுப்பின் நளின இசை போன்ற அசைவைக் கண்டு களிக்கிறது; ஆபீஸில் எனது ஸ்டெனோவின் பவுடர் மணம், அவள் விட்டுச் சென்ற ஓர் உதிர்ந்த பூ — பல கற்பனைகளை எழுப்புகிறது. சினிமாவில் பக்கத்து ஸீட்டில் ஒரு யுவதி அமர்ந்தால் பரவசமடைகிறது; நண்பனின் மனைவியாக இருந்தால்கூட அவளது திரையிட்ட அழகைத் திருட்டுத்தனமாக ரசிக்க முற்பட்டிருக்கிறேன். கடைக்குப் பண்டம் வாங்கச் சென்றால் விற்பனையில் ஈடுபட்டிருக்கும் வனிதையின் மேனிப் பூரிப்பை ரசித்திருக்கிறேன்; எக்ஸிபிஷனில் என் முன் நடந்து சென்ற ஓர் இளம் பெண்ணின் காலழகு என்னைக் கவர்ந்தது! கோவிலில் கூட எனது மனக் குரங்கு கூத்தடித்தது. எதிரே இருந்த ஒரு ஸ்திரீயின் கூந்தலழகைக் கண்டு நெகிழ்ந்தது... இவ்வாறு என் மனம் சதா துருவித் துருவி அலைந்து கொண்டே இருந்தது. ஆனால் இவ்வளவு விகாரத்தையும் மறைத்துக் கொண்டு நான் ஒரு நல்ல தகப்பன்; நல்ல கணவன் என்று பெயர் எடுத்தேன்...''

''இப்படி நீ குறை கூறிக் கொள்வதில் பயனில்லை. ஒவ்வொரு மனித உள்ளமும் இப்படித்தான் இருக்கிறது. நாம் ஒரு 'ஸெக்ஸி' உலகத்தில் இருக்கிறோம். மனித கலை நாகரிகத்திலும் சினிமாவிலும் இலக்கியத்திலும் இந்த 'இம்பாக்ட்' இருக்கத்தானே செய்கிறது...''

''என்னால் இந்த இரட்டை வாழ்க்கை வாழ முடியவில்லை. நர்ஸின் பரிவு எனக்கு இதமாக இருந்தது. அவளது இளமையும் எழிலும் எனக்கு வேண்டியிருந்தன. கடைசியில் நான் மனைவி குழந்தைகளை விட்டு வரத் துணிந்து விட்டேன். ஆனால் அவர்களுக்குச் செலவுக்குப் பணம் அனுப்பி வருகிறேன். தகப்பன் என்ற கடமையை மறக்கவில்லை...''

''உன் மனைவியிடம் நீ கண்ட அதே வயதுக் குறையை நர்ஸ் உன்னிடம் விரைவில் காணலாம். அப்போது பிரிவு நிச்சயமாக ஏற்படும். ஆனால் அதற்குள் 'லீகல் காம்பிளிகேஷன்ஸ்' ஏற்படாமல் பார்த்துக்கொள்...''

வேறொன்றும் சொல்லத் தோன்றாமல் மாசிலாமணி கை குலுக்கி விட்டுப் புறப்பட்டார்.

* * *

''என்ன சொன்னார் உங்கள் நண்பர்?'' வீட்டு வாயிலிலேயே காயத்ரி குறுக்கிட்டாள்.

''எத்தனையோ பிரைவேட் காரணங்கள் இருக்கலாம். என்னிடம் சொல்லவில்லே.''

''மண்ணாங்கட்டி! பிரைவேட் காரணம். கொழுப்பு; - வேறே என்ன?'' சாரதாவின் கணவனைப் பற்றிய விமரிசனம் என்றாலும் தனது புருஷனே வழி பிசகியது போன்ற ஆத்திரம் மிதிடும் த்வனி அவளது குரலில் இருந்தது.

''சாரதாவுக்கு என்ன பதில் சொல்ல?''

''நம்பிக்கை இழக்க வேண்டாம், வந்து விடுவான் என்று சொல்லு.''

''இந்த ஆம்பிளேங்களே இப்படித்தான்!''

காயத்ரி ஒரு 'பொஸஸிவ் டைப்'. குடும்பம், கட்டுப்பாடு என்ற பெயரில் அவளது அளவுகோல் இட்ட நியதிப் பிரகாரம் கணவன், குழந்தைகள், யாவரும் நடந்துகொள்ள வேண்டும். இல்லாவிட்டால் 'இடுப்பிலே இரு கை' வைத்துக் கண்டிக்கிற காரக்டர் அவள்.

* * *

**பி**ஜிலானி விளம்பர மாதிரிகளை எடுத்துக் கொண்டு அனுமதி பெற வந்தாள். ஆடை குறைந்த 'ஹிப்பினி'கள் இவர் ஒரு சட்டையை வைத்துக் கொண்டு போஸ் தருகின்றனர். ஆண்கள் ரெடிமேட் ஷர்ட் விளம்பரத்தில் மருந்துக்குக்கூட ஆண் வாடை இல்லே!

மாசிலாமணி படத்தில் ஒரு பெண்ணின் மார்பகத்தை இன்னும் 'டச்' செய்யச் சொன்னார். பிஜிலானி எழிலுறத் தலையசைத்தாள்.

''லெட் அஸ் ரூல் வித் தி டைம்ஸ்!'' பிஜிலானியின் விமர்சக வாசகங்களில் உள்ள 'அஸ்' என்ற பிரயோகம் அவரைப் புளகமுறச் செய்தது. உறவு உரிமை எடுத்துக் கொண்டு சதா விமரிசித்துக் கொண்டே இருக்கும் தனது மனைவியின் உருவத்துக்கும் இந்த அறிவுப் பெட்டகத்துக்கும் இடையே எத்தனை அகன்ற அகழி!

மனத்தை அமுக்கி வைத்தால் கூட அவளிடம் தமக்கு ஒரு கவர்ச்சி ஏற்படுவதை மாசிலாமணி உணர்ந்தார்.

'என்ன குரங்கு மனசுடா இது! செல்வராஜ் பரவாயில்லே. ஹாய்யா நினைச்சதைச் செய்ய வெளிப்படையா உதறிவிட்டுப் போய் விட்டான். நாமதான் வக்ர மனசை வைச்சுக்கிட்டு வேஷம் போட்டுக்கிட்டு இருக்கோம்!'

'பிஜிலி' என்றால் மின்சாரம் என்று பொருள். பிஜிலானியின் காந்தக் கவர்ச்சிக்கு அது பொருத்தமான பெயர்தான்.

''மனிதனுக்கு 'இன்டலக்சுவல் கம்பானியன்' வேண்டும். அத்தகைய நிறைவு ஒன்றைத்தான் நான் பிஜிலானியின் தோழமையில் காண்கிறேன்' என்று இலேசாக சமாதானப்படுத்திக் கொண்டார், மாசிலாமணி.

* * *

''**ரோ**மியோ — ஜுலியத்' —புதுசா ஓர் இத்தாலியப் படம் வந்திருக்கு. 'மன் ஏஜ்'

## அண்ணாவின் ''அண்ணா''

'அண்ணா' என்று அண்ணல் காந்தியடிகளால் அன்புடன் அழைக்கப் பெற்ற பெருமை பண்டித ஹரிஹர சர்மா ஒருவருக்குத்தான் உண்டு.

அதிதீவிர வன்முறைகளாலேயே இந்தியா விடுதலை பெற முடியும் என்ற கொள்கையில் ஊறித் திளைத்த பின் காந்தியடிகளின் அஹிம்ஸை வழியைக் கடைப்பிடித்து இறுதி மூச்சு வரை அவ்வழியிலேயே சென்றவர் ஹரிஹர சர்மா. காந்தியடிகளின் திட்டப்படி ஹிந்தி கற்றுவர முதல் மாணுக்கராகச் சென்றவரும் ஸ்ரீ ஹரிஹர சர்மாதான்.



ஹிந்தி மொழியின் முதல் பிரசாரகர் வரிசையிலே இடம் பெற்றதோடு ஸ்ரீ சர்மாஜி தென்னிந்திய ஹிந்திப் பிரசார சபையின் முதல் செயலாளராகவும் பணியாற்றினர். இன்று சென்னையில் எழும்பி நிற்கும் ஹிந்தி பிரசார சபைக் கட்டிடத்தின் ஒவ்வொரு கல்லுமே அவரது பெரும் பணியைப் பேசும்.

ஸ்ரீ சர்மாஜி ஹிந்திப் பிரசாரகர் மட்டும் அல்ல; அவரது தமிழ்த் தொண்டும் பெருமை உடையது. மகா கவி பாரதியாருடன் நெருங்கிப் பழகும் வாய்ப்புப் பெற்ற அவருடைய முயற்சியினால்தான் பாரதி பிரசுராலயம் உருவாகி, பாரதியாரின் நூல்கள் அழிந்து விடாமல் காப்பாற்றப்பட்டன. மற்ற மொழிகளுக்கும் பாரதியாரின் பெருமையைத் தெரிவித்த பெருமை அவருக்கு உண்டு. இந்தியாவின் பல மொழிகளையும் கற்றுத் தேர்ந்த அவர், பல மொழிகளுக்கு இலக்கியப் பாலமாகப் பணி புரிந்துள்ளார். தமது எண்பத்திரண்டாவது வயது வரையில் - மூச்சு ஓயும் வரையில் பணியே உருவாகத் திகழ்ந்த அவரது அரும் பெரும் கடைசிப் பணி, ஸ்ரீ ராமச்சந்திர டோங்ரேயின் பாகவத உபந்யாசங்களைத் தமிழ்ப்படுத்தித் தந்ததாகும். அவரது ஆன்ம சாந்திக்கு அவருடைய குடும்பத்தாருடன் நாமும் பிரார்த்திப்போம்.

**பண்டைகாலமாக பழனி சித்தர் வைத்தியசாலை உண்மையான முறையான நேர்மையான வைத்திய சேவை புரிகிறது!**

## வாலிப - வயோதிக - அன்பர்களே!

**பழனி சித்தர் மருந்துகளே பாரில் உயர்ந்தது என்பது உலகம் அறிந்த உண்மை!**

---

பிரபல பழனி,

வைத்திய திலகம்    வைத்தியராஜ்



**Dr. S. காளிமுத்து**

R.M.P. (IND) V.V.C. A.M.I.H.

தங்களின் உடல் மிகவும் பலமில்லாமல் இளைத்து உடல் வலுவில்லாமல் குடும்ப வாழ்க்கையில் நிம்மதியில்லாமல் வயோதிகரைப்போல் களைப்பு மேலிட்டு வேலைகளைச் சரிவர செய்ய இயலாமை — இதனால் கஷ்டப்படுகிறீர்களா? வாலிப வயதில் தெரிந்தும், தெரியாமலும் செய்கிற தவறுதல்களே, இப்போது உடல் கெட்டு பலகீன மடைந்து ரத்தக் குறைவு, சோர்வு, தலைவலி, உஷ்ணம், சோம்பல், கைகால் அசதி, பலகீனம், உடல் வலி, களைப்பு, தூக்கக் குறைவு, ஆயாசம், பீதி, வெட்கம், பயம், வெறுப்பு உண்டாகி, தாய் தந்தையரிடமும், மற்றவர்களிடமும் சொல்ல முடியாமல் மன வேதனையும் கஷ்டமும் அடைந்து, நிம்மதியில்லாமல் வாழ்கிறார்கள். மேற்படி காரணங்களால் உடல் நலம் பாதிக்கப்பட்டவர்களும், கவலைப்பட வேண்டாம். இம்மாதிரியான வியாதியஸ்தர்கள் 74 வருட அனுபவம் பெற்ற நமது சாஸ்த்ரிய முறையான மிக உயர்தரம், உயர்தரம், முதல்தரம், இரண்டாந்தரம் எதுவாகிலும் சாப்பிட்டாலே எடை அதிகப்பட்டு, இரத்த விருத்தியுடன் உடல் பலமடைந்து புதிய சக்தி, புத்துணர்ச்சி பெற்று நிம்மதியான வாழ்க்கை வாழலாம். எவ்விதமான பத்தியமும் இல்லை. ஆர்டரில் தேவைப்பட்ட மருந்தின் விலைகளைக் குறிப்பிட்டு எழுதவும். வி.பி.பி. தபால் பார்சலில் பெற இன்றே எழுதுங்கள். சென்னையிலும், பழனியிலும், கேம்புகளிலும் நேரில் பெறலாம். மருந்தும் விருந்தும் மூன்று நாள் என்பது பழமொழி. மருந்து உபயோகிக்கும்பொழுதே பலனைக் காணலாம். வி.பி.பி. செலவு இலவசம். வெறும் கடிதம் கவனிக்க இயலாது. சித்த வைத்திய மருந்துகளும், பழனி மருந்துகளும் நல்ல பலன் தரும் என்பதை அறியவும்.

**ஒரு மாதம் சிகிச்சை மருந்துகள்: மிக உயர்தரம் ரூ. 90**
**உயர்தரம் ரூ. 42. முதல்தரம் ரூ. 33. இரண்டாந்தரம் ரூ. 24.**

**எங்கள் மாபெரும் வெற்றிகரமான மாதாந்திர சுற்றுப்பயண தேதி விலாசங்கள் கவனிக்கவும்**

**கிளை: 41, நைனியப்பன் தெரு, மண்ணடி, சென்னை. போன்: 21448**

சென்னைக் கிளை ஆபீஸில் 1 முதல் 7 தேதி மீண்டும் 15 முதல் 21 தேதி நேரில் விஜயம்.

GOVT. REGD. T. M. No. 204341    REGD. 15443

வைத்திய திலகம் வைத்தியராஜ் டாக்டர் S. காளிமுத்து

**பழனி சித்தர் வைத்தியசாலை (K) பழனி S.I.**

போன்: 316    (தியேட்டர் ஸ்ரீ ரங்கராஜா பக்கம்)    தந்தி: சித்தர்

நடிகர்களாம். போவோமா?'' என்று அழைத்தார் மாசிலாமணி தம் மனைவியை.

''பிள்ளை இல்லா வீட்டில் கிழவன் துள்ளி விளையாடினானும்! இந்த வயசுக்கு மேலே ரோமியோ — ஜுலியத் வேறே கேட்குதோ? உங்களுக்கும் நண்பரின் வாடை அடிக்கிறாற் போலிருக்கு'' என்று நையாண்டி செய்தாள் காயத்ரி.

மறுப்பைக் கூட மாசிலாமணியினால் பொறுத்துக் கொள்ள முடியும். ஆனால் பண்பாடு இல்லாத அவ்வாசகங்களின் மறை பொருளைத்தான் அவரால் ஒப்புக்கொள்ள முடியவில்லை. காயத்ரிதான் அவரை விட எவ்வளவு பின்தங்கி நிற்கிறாள்!

மறுநாள் ஆபீஸ் முடியும் தருவாயில் அவர் மீண்டும் வீட்டுக்குப் போன் செய்தார். பழைய கதைதான். காயத்ரி மறுத்து விட்டாள்.

அண்மையில் இருந்த பிஜிலானி டெலிபோனைக் குனிந்து வாங்கி வைத்தாள். லோ-கட் சோளி.

கண்களை மூடி மென்று விழுங்கியபடி ''இன்னொரு டிக்கட் வீண்!'' என்றார் மாசிலாமணி.

''ஐ வில் லெண்டு மை கம்பெனி, இஃப் யூ லைக் இட்'' — பிஜிலானியின் பவள வாய் உதிர்த்த சொற்கள் மாசிலாமணிக்கு மாசில் வீணை நாதத்தை நினைவுறுத்தின.

பிஜிலானி அவருடன் காரின் முன் ஸீட்டில் அமர்ந்தாள்.

'காரின் முன் ஸீட்டு என்னுடையது. நீங்க டிரைவ் பண்ணும்போது வேறே ஒரு பெண் அங்கே உட்காரக் கூடாது' என்று காயத்ரி அடிக்கடி சொல்வாள். சாரத்தியம் செய்த நேரத்தில் மாசிலாமணிக்கு அந்த வார்த்தைகள் நினைவுக்கு வந்தன.

இடைவேளையில் மாசிலாமணி அவளைத் தியேட்டர் ஸீட்டில் விட்டு விட்டு ஐஸ்கிரீம் பார்லர் அருகே வந்தார்.

''ஹலோ!'' என்ற குரலைக் கேட்டுத் திரும்பினார். செல்வராஜ் — தனியாக இல்லை. அவனோடு இன்னொரு பேரழகி இருந்தாள்.

''என்ன விழிக்கிறீர்கள்? நர்ஸ் ஒத்து வரவில்லை. போய்விட்டாள். இது ஒளப் அறிமுகம்.''

''மீட் மிஸ் சாந்தா. பிரபல சமூக சேவகி!'' என்று அவளை மாசிலாமணிக்கு அறிமுகம் செய்து வைத்தான், செல்வராஜ். வயதை மறைக்கும் அரிதாரப் பூச்சு; அங்கங்களில் அதிகப்படி நிமிர்வை ஏற்படுத்தும் ஆடை அலங்கார வீச்சு; ஆங்கிலப் பேச்சு. ''அடுத்த வாரம் மஹாபலேஷ்வர் போகிறோம். ஒரு மகாநாடு. திரும்பி வந்ததும் பேசுகிறேன்'' என்று கூறியவாறு செல்வம் அவளைத் தள்ளிக் கொண்டு புறப்பட்டான். அவனது ஆகிருதி, நடையில் இருந்த உறுதி ஓட்டம் — அவனது மாறாத இளமையைப் புலப்படுத்தின. 'இந்த ஆ கி ரு தி க் கு, இதுவும் தேவைதான்' என எடை போட்டார் மாசிலாமணி. மஹாபலேஷ்வர் மலை உச்சி, ஏகாந்த இனிமை, மலையின் மரகதப் பசுமை, செல்வம், அவனுடன் ஒரு பெண் — மாசிலாமணியின் கற்பனை விரிந்தது.

'கொடுத்து வச்ச பயல்' — அவரது உதடுகள் முணு முணுத்தன.

''பிரண்டைப் பார்த்தீங்களா, பிரண்டையை'' என்று இரு பொருள்படப் பேசினாள், காயத்ரி.

''ம்ம்.''

''பணம் அனுப்பிச்சா போதுமா? இந்த வயசில் இன்னொரு பெண்ணுடன் சுத்திக்கிட்டு... நாக்கைப் பிடுங்கிக்கிட்டுச் சாகலாம்!''

''எதுக்கு நீ கரிக்கிறே? இன்றைக்கு நானே பார்த்துக் கேட்கிறேன்...''

''ஆபீஸுக்குப் போனாத்தான் உங்களுக்கு வீட்டு ஞாபகமே இருக்காதே! அந்தப் பெண் கண் கலங்கி நிக்குது. நீங்க கேளுங்க. இல்லை, அந்த மனுஷனை இங்கே அழைச்சுக்கிட்டு வாங்க. நானே கேட்கிறேன். அண்ணி அண்ணின்னு நல்ல பிள்ளை மாதிரி நடிப்பாரே....!''

காயத்ரியின் ஆர்வம் அவருக்குச் சற்று எரிச்சலை விளைவித்தது.

அவர் போன் செய்வதற்கு முன்பு அழைப்பு செல்வராஜிடமிருந்தே வந்திருந்தது.

''இன்று மாலை குவாலிட்டியில் சந்திக்க முடியுமா? உங்களுடன் பேச வேண்டும்.''

ஆமோதிப்பு.

மங்கலான விளக்கு வெளிச்சம். ஒரு மூலை மேஜையை ரிசர்வ் செய்திருந்தான், செல்வராஜ்.

''என்ன சாப்பிடுகிறீர்கள்?''

செல்வத்தின் முகத்தில் களையே இல்லை. ''எனக்கு இந்த வாழ்க்கையே அலுத்து விட்டது. உண்மையான அன்பு, பாசம் என்ற நிலையே இல்லை. வெறும் நிழல்கள். எல்லாம் போலி. எனது உள்ளத்து உளைச்சலைக் குறைக்க மது தேவைப்படுகிறது.''

''வீட்டுக்குப் போய்விடேன்.''

''குழந்தையின் முகத்துக்கு ஏங்கிவிட்டேன். ஒவ்வொரு முறையும் வீட்டுக்குப் ஃபோன் செய்து விட்டுப் புறப்படுவோம் என எண்ணுகிறேன். ஃபோன் வரை நடக்கிறேன். ஆனால் 'டயல்' செய்யத்தான் தைரியம் வரவில்லை...''

ஒரு 'மடக்கு' உள்ளே போகிறது.

''யோசித்து யோசித்துப் பார்க்கிறேன். என் வயதுதான் உனக்கும். அண்ணியின் போக்கும் எனக்குத் தெரியும். உத்தியோக வாழ்க்கையில் மேலிடம் பெற்றவன் நீ. கலையம்சம் நிரம்பிய தொழில். உன்னைச் சுற்றி பெண்மணிகள், ஆர்டிஸ்ட், மாடல்கள், அஸிஸ்டெண்ட் — என்று எத்தனையோ பெண்கள். இருப்பினும் மலைபோல நிற்கிறாயே. உனது நிதானமும் போக்கும் எனக்குப் படிப்பினையாக அமைந்தன. நான் திருந்திய வாழ்க்கை நடத்த விரும்புகிறேன். நான் ஒரு பிராடிகல் ஸன். நீதான் என்னைச் சேர்த்து வைக்கணும்.''

மாசிலாமணி அவனது கரங்களைப் பற்றி ஆறுதலாகத் தட்டினார். அவனை அவரால் நன்றாகப் புரிந்து கொண்டு அநுதாபப்பட முடிந்தது.

நிழலை அசல் என்று எண்ணி ஏமாந்தவனும் ஏமாறா இருந்தவரும் ஒன்றாகத் திரும்பினர்.

# ஏற்றுமதித் துறையில்



# திருச்சி கனரககொதிகலன் தொழிற்சாலையின் புதியதோர் சாதனை!

மலேசிய நாட்டிற்கு மூன்று 120 MW கொதிகலன்களை வடிவமைத்து, உருவாக்கி, நிறுவுவதற்கான இரண்டாவது வாய்ப்பை பல நாடுகளின் தீவிர போட்டிகளுக்கிடையே BHEL பெற்றுள்ளது.

இப் புதிய பணி போர்ட் டிக்ஸனில் உள்ள துங்கு ஜா அபர் மின் நிலையத்திற்கான முதல் பணியைக் காட்டிலும் நான்கு மடங்கு பெரியது.

கடந்த ஆண்டில் திருச்சி BHEL கொதிகலன் தொழிற்சாலை இரண்டு 60 MW பாய்லர்களை நிர்மாணிக்கும் பணியை ஏற்றது. இதற்கு முன்னோடியாக அமைந்தது. இதற்கு முன் இம்மாதிரிப் பணிகளை வழக்கமாக அளிக்கும் இங்கிலாந்து, ஜப்பான் நாடுகளை தவிர வேறு நாட்டினரிடம் அவர்கள் ஒப்படைத்ததில்லை. இத்திட்டத்திற்கான வேலை குறிப்பிட்ட காலத்தில் ஆரம்பிக்கப்பட்டு துரிதமாக நடைபெற்று வருகிறது.

BHEL நிறுவனத்தின் நிர்மாணத் திறமையில் பூரண திருப்தியடைந்த மலேசியா புதிய மூன்று 120 MW கொதிகலன்களை நிறுவும் பணியையும் அவர்களிடமே ஒப்படைத்திருக்கிறது.

இந்த பணியின் மூலம் இந்தியாவுக்கு கிடைக்கும் அந்நிய செலாவணியின் மதிப்பு சுமார் ரூ. 10 கோடியாகும்.

BHEL திருச்சி, துவங்கப்பட்டு ஆறு ஆண்டுகளிலேயே நன்கு வளர்ந்துள்ளது. சமீப காலம்வரை அனல் மின் சக்தி உற்பத்திக்கான தொழில் நுட்ப அறிவிற்கும், சாதனங்களுக்கும் இந்தியா வெளிநாட்டின் உதவியையே நம்பியிருந்தது. ஆனால் இன்றோ இவற்றில் தன்னிறைவு பெற்றுள்ளதோடு உலகநாடுகளின் நன்னம்பிக்கையும் பெற்றுள்ளது.

வளம்கொழிக்க, மின்சக்தி உற்பத்தி பணியில் **BHEL**

**பாரத் ஹெவி எலக்ட்ரிகல்ஸ் லிமிடெட்**
(இந்திய அரசு நிறுவனம்)
கனரக கொதிகலன் தொழிற்சாலை, திருச்சிராப்பள்ளி-14
பதிவுபெற்ற அலுவலகம்: 5, பார்லிமெண்ட் தெரு, புதுடில்லி-1

BHEL-6564

# மணமான தம்பதியர்

இதோ ஒரு புதிய, முற்றிலும் சோதிக்கப்பட்ட வசதியான கருத்தடைச் சாதனம்...

# டெல்ஃபென் க்ரீம்

## கருத்தடை க்ரீம்

கணவன்–மனைவி இருவருக்கும் ஏற்றது.






டெல்ஃபென் என்பது என்ன?
டெல்ஃபென் ஒரு உடனடியாகப் பயன்தரும் கருத்தடை க்ரீம்.
டெல்ஃபென் மென்மையானது. எரிச்சல் அளிக்காதது.
டெல்ஃபென் உபயோகிக்க இன்பமானது ஏனெனில் அதிலே ஒரு மென் மணம் உண்டு. எண்ணெய்ப்பசையற்ற அது உடைகளைக் கறை படுத்தாது.
டெல்ஃபென் உபயோகிக்க எளிதானது, வசதியானது. தேவைப்படும்போது மட்டுமே அதை உபயோகியுங்கள்.
டெல்ஃபென் சிக்கனமானது. பெரிய எகானமி சைஸ் டியூப் நாற்பது தடவைகள் உபயோகிக்கப் போதுமானது. ஒரு தடவை உபயோகிக்கும் செலவு 15 காசு மட்டுமே.
டெல்ஃபென் வைத்தியர் குறிப்பு இன்றியே மருந்துக் கடைகளில் தயாராகக் கிடைக்கிறது.
டெல்ஃபென் பற்றிய விவரங்கள் யாவும் உங்கள் டாக்டருக்குத் தெரியும், அதை உபயோகிக்கும் முறைபற்றி அவரே விளக்குவார்.
டெல்ஃபென் அமெரிக்காவிலுள்ள ஆர்தோ பார்மஸூடிகல் கார்பொரேஷனைச் சேர்ந்த விஞ்ஞானிகளால் கண்டுபிடிக்கப்பட்டது. ஆர்தோ நிறுவனம் கருத்தடைச் சாதனங்களின் ஆராய்ச்சியிலும், அபிவிருத்தியிலும் நிபுணத்துவம் பெற்றது. இதை மனத்தில் கொண்டுதான், டாக்டர்கள் ஆர்தோ தயாரிப்புக்களை சிபாரிசு செய்கின்றனர். இலட்சக்கணக்கான மக்கள் தினமும் டெல்ஃபெனை நம்புகின்றனர்.
50கி 100கி. டியூபுகள் மற்றும் கையடக்கமான பிளாஸ்டிக் பைகளில் டெல்ஃபென் இப்போது கிடைக்கிறது. புதிய 2.5கி. அப்ளிகேடர் மூலம் டெல்ஃபெனை உபயோகித்து மேலும் சிக்கனம் செய்யுங்கள்.
விளக்கப்படங்களுடன் கூடிய இலவச கைப்புத்தகத்திற்கு எழுதுக:
டிபார்ட்மென்ட் எஸ், எத்னுர் லிட்., 30ஏ, ஃபோர்ஜெட் ஸ்ட்ரீட், பம்பாய்–26.

**டெல்ஃபென் க்ரீம்** நம்பிக்கையின் மறு பெயர்

பதிவு பெற்ற டிரேடு மார்க்

JAISONS-185 TAM




பிச்சைக்காரர்களின் நிதி உதவிக்காகத் தமிழக அரசு 50 காசு அட்டைகளை விற்பனை செய்து வருகிறது. இந்த விற்பனை வேலையை ரெவின்யூ அதிகாரிகளும் மற்றும் ஆசிரியர் போன்றவர்களும் ஏற்றுக் கொண்டுள்ளனர். தாலுகா ஆபீஸ் ஒன்றுக்கு நான் சென்றிருந்தேன். அங்கு நடைபெறும் சம்பவங்களை எண்ணித் திகைத்துப் போனேன். தாசில்தாரரின் கையெழுத்து வேண்டி வரும் ஒவ்வொருவரும் கட்டாயமாக ஒரு 50 காசு அட்டை வாங்க வேண்டுமாம். இந்த அட்மிஷன் காலத்தில் மாணவர்கள் பல தடவை பலவித சர்டிபிகேட்டுகளுக்காக வரவேண்டிய நிர்ப்பந்தம். இந்த நிர்ப்பந்தத்தைப் பயன்படுத்தித் தங்கள் தலையில் கட்டப்பட்ட 50 காசு அட்டைகளை விற்பனை செய்யும் வேலையை முடித்துக் கொள்ள இந்த விதமான சுலப வழியை இதுபோன்ற அதிகாரிகள் கடைப்பிடித்து வருகின்றனர். இன்னும் இது போன்று இந்த அட்டைகளை விற்க ஆசிரியர் போன்றவர்கள் எந்தெந்த வழிகளைப் பின்பற்றுகின்றனரோ?

இப்படிக் கட்டாயப்படுத்தியும் நிதி சேர்க்க வேண்டுவது நியாயம்தானா?

சென்னை–1
21–6–71 எம். ராமமூர்த்தி

★ தமிழக அரசு செய்திப் படப் பிரிவு இது வரை சுமார் ஐம்பது படங்களைத் தயாரித்து விட்டது. ஒன்றுகூட உருப்படியில்லை. ஒரு படமாவது மக்களுக்குக் கல்வி, சுகாதாரம், பண்பு ஆகியவைகளைப் போதிக்க எடுக்கப்படவில்லை. எல்லாப் படங்களும் தி. மு. க. அரசுக்குத் தண்டோரா மட்டுமே போட்டன.

திரைப்படத்தைக் கண்டறிந்தவர்கள், அத்துறை வளர்ச்சியடைய உழைத்தவர்கள், அவைகளினால் மக்களுக்கு ஏராளமான நன்மைகள் ஏற்பட வேண்டும் என்ற எண்ணத்துடன் பாடுபட்டார்கள். அவர்கள் எண்ணங்கள் மதிக்கப்பட வேண்டும்.

இனி மேலாவது தமிழக அரசு செய்தித் துறை, மக்களுக்குக் கல்வி, விஞ்ஞானம்,

★ இக்குறிப்பிட்ட கடிதம் ரூ. 15/- பரிசு பெறுகிறது.

சுகாதாரம், இட ஆரோக்கியம் ஆகியவற்றைப் பற்றிய செய்திகளை அளிக்கட்டும்.

சென்னை, அமெரிக்கப் பண்பாட்டு நிலைய அரங்கிலே அண்மையில் பேசாத் திரைப்பட விழாவைத் தொடங்கி வைத்த அமைச்சர் நெடுஞ்செழியன் ''திரைப்படத்தின் தலையாய லட்சியம் பொழுது போக்குத்தான்; ஆனால் சமயத்தில் அதற்கு ஒரு குறிக்கோளும் இருந்தாக வேண்டும்'' என்று பெரிய மனசு பண்ணி ஒப்புக் கொண்டிருக்கிறார். தமிழக அரசின் செய்தித் துறைக்கும் சமயத்தில் ஏதேனும் ஒரு சிறந்த லட்சியம், குறிக்கோள் என்று இருப்பது நல்லது அல்லவா ?

திருச்சி
28–6–71 எஸ். ஜெயராமன்

> ''வேலொடு நின்றான் இடுஎன் றதுபோலும்
> கோலொடு நின்றான் இரவு''

செங்கோலேந்திய மன்னன் மக்களிடம் சென்று தானம் கேட்பது, ஆறலைக் கள்வர் வேலினைக் காட்டிக் கொள்ளை செய்வது போல் ஆகும் என்றார் வள்ளுவர். வள்ளுவத்தைத் தமிழ் மறை எனப் பறைசாற்றுகின்றனர் இன்றைய தமிழ்நாடு ஆளும் கட்சியினர். வள்ளுவர் கருத்துப்படி இவர்கள் கார் வாங்குவதற்கு மக்களிடம் பெறும் நன்கொடையை அதிகாரம் பதவி என்ற வேலினைக் காட்டிப் பெறும் கொள்ளைப் பொருள் என்றால் தவறாகாது. அரசு பல காரணங்களுக்காக ஆசிரியர் போன்றோரிடம் கட்டாயப்படுத்தி நன்கொடை என்ற பெயரில் பெறும் பணம் உண்மையான நன்கொடையல்ல என்பது நமது கருத்து. அது கொள்ளைப் பொருள் என்பது வள்ளுவரின் கருத்து. மேலும், பெர்மிட், லைசென்ஸ் கோட்டா என்ற திரிசூலத்தைக் காட்டி ஆளும் கட்சியினர், பெரும் முதலாளிகளிடம் கட்சி நன்கொடை என்ற பெயரில் அடிக்கும் கொள்ளையும் நாடறிந்ததே. நன்கொடை என்று கூறிக் கொள்ளையடித்தலை என்றுதான் விடுவரோ?

பாளையங்கோட்டை
2–7–71 எஸ். தூயிஸ்

ஜனாதிபதி எழுதிய கடிதம் தமிழ் நாடு முதலமைச்சரை அடைய நாலுநாட்கள் ஆயின என்றொரு துணுக்கு கல்கி 27-6-71 இதழில் இடம் பெற்றுள்ளது. இதைத் தூக்கி அடிப்பதாக இருக்கிறது எனக்கு ஏற்பட்ட ஓர் அநுபவம். பம்பாயிலிருந்து 21–6–71 அன்று அனுப்பப்பட்ட ஒரு தந்தி நாலு நாட்களுக்குப் பிறகு 25–6–71ந் தேதியன்று எனக்குக் கிடைத்தது. இது அதிசயத்திலும் அதிசயம் அல்லவா ?

சென்னை – 33
30–6–71 கே. பி. அய்யர்

# தற்கொலையா? கொலையா?

எம்வுட் சாலையின் முப்பத்தேழாம் நம்பர் வீடு நடுத்தரமானது. காரை பூசிய சுவர்கள்; சிறுசிறு ஜன்னல்கள்; தனிமை பெற்றுவிட்டது போன்ற தோற்றம். ஊசியிலை மரங்கள் தாறுமாறாக வளர்ந்திருந்ததால், தெருவில் போவோர் அதைப் பார்க்க முடியாது. அந்த வீட்டின் கறுப்பு இரும்புக் கதவைத்தாண்டி, அப்பாலுள்ள பாசி படர்ந்த பைத்தியக்காரப் பாதையில் நடமாடியவர்கள் மிகக் குறைவு.

பிரகாசமான ஏப்ரல் மாதத்தில் ஒரு நாள் காலை துப்பறியும் இன்ஸ்பெக்டர் ஸ்லேட் அந்த வீட்டுக்குப் போன போது, வாயிலில் சீருடை அணிந்த ஒரு போலீஸ்காரர் காவலுக்கு நின்றார்.

''கான்ஸ்டபிள், இன்ஸ்பெக்டர் ஜாரட் உள்ளே இருக்கிறாரா? நான் ஸ்காட்லாண்ட் யார்டிலிருந்து வருகிறேன்.''

கான்ஸ்டபிள் விறுவிறுப்பாக சல்யூட் செய்தார். ''எஸ், சார்! இன்ஸ்பெக்டர் ஸ்லேட் தானே? அவர் உங்களை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார் சார்.''

கதவு திறக்கப்பட்டது. ஸ்லேட் உள்ளே நுழையும் போதே, வீட்டின் வெளித் தோற்றம் அவலட்சணமாக இருந்ததையும், வர்ணம் பூசப்படாததையும், தோட்டம் காடாக மண்டியுள்ளதையும் கவனித்துக் கொண்டார். அவர் காலிங் பெல் பித்தானை அழுத்தப் போகும் சமயம், கதவு திறக்கப்பட்டது.

''ஹலோ, ஜாரட்! பழைய காலம் போல் இருக்கிறது, நம் சந்திப்பு!'' என்றார் ஸ்லேட். இருவரும் முன்பு சேர்ந்து வேலை செய்தவர்கள்.

இன்ஸ்பெக்டர் ஜாரட் கதவை உட்பக்கம் தாளிட்டவாறுதலையசைத்தார்.

''ஸ்லேட், நமக்கு அதிக வேலை இராது. மிகவும் சாதாரணமான தற்கொலை வழக்கு இது. உங்களை இவ்வளவு தூரம் அலைக்கழித்திருக்க வேண்டாம்.''

ஜாரட் வழக்கம் போல் விறுவிறு வென்று இருந்தார். ஸ்லேட், ஓவர் கோட்டைக் கழற்றிக் கொண்டே புன்னகை புரிந்தார்.

''யார் அவன்?'' — பச்சைத் தோல் பையுடன் ஜாரட்டுக்குப் பின்னால் ஹாலில் போகும் போது அவர் கேட்டார்.

''நேறலின் என்றொரு கிழவன். கருமி என்கிறார்கள்; எனக்குத் தெரியாது; ஆயினும் அவன் ஒரு விநோதமான ஆள் என்று எல்லாரும் ஒருமுகமாகச் சொல்கிறார்கள். சரி, அவனுடைய தொல்லைகள் தீர்ந்து விட்டன. அதோ, இருக்கிறான் பாருங்கள்.''

ஜாரட் கதவைத் திறந்தார். அந்த அறை டிராயிங் ரூமாகவும் படிப்பகமாகவும் பயன்பட்டிருக்க வேண்டும். ஒரு சுவரில், புத்தகங்கள் அடுக்கப்பட்ட அலமாரிகள். எதிர்ப்புறம் ஓக் மர மேஜை; ஒரு மூலையில், கணப்பருகில் ஓக் பீரோ; இரண்டு தோல் உறையுள்ள சாய்வு நாற்காலிகள்; மற்றொரு சாதாரண நாற்காலி.



'' பிரம்மசாரி.!'' என்றார் ஸ்லேட்.

''குடும்பம் இருப்பதாய் இது வரை தெரியவில்லை. நம் இலாகா ஸர்ஜன் மிஸ்

டர் ஹெப்பினைச் சந்தியுங்கள். சமீபத்தில் தான் நம். இலாகாவில் சேர்ந்தார்.''

ஒற்றை நாடி உடம்பும், நீண்ட நாடையுமுள்ள சர்ஜன் பிரான்ஸிஸ் ஹெப்பின் சாய்வு நாற்காலியிலிருந்து எழுந்து ஸ்லேட்டின் கையைக் குலுக்கினார்.

''இன்ஸ்பெக்டர், இது ஒரு பிளெய்ன் கேஸ். தற்கொலை. இன்ஸ்பெக்டர் ஜாரட் சொல்லியிருப்பார். வாயில் மேலண்ணத்தைத் துளைத்துக் கொண்டிருக்கிறான்!'' என்றார் சர்ஜன்.

செத்தவனின் சடலத்தின் மீது ஸ்லேட் குனிந்தார். வாயிலும், மோவாயிலும் ரத்தக் கறைகள் இருந்தன; அடிக் கன்னத்தில் காய்ந்த ரத்தக் கறை இருந்தது. பழைய ஜமுக்காளத்தின் மீது ஒரு பெரிய கறை. வலது கை விரல்கள் வளைந்த முழங்கால்களுக்கு அருகில் மிருகங்களின் கால் நகங்கள் போல் பரந்திருந்தன. கலைந்த தலைக்கு இரண்டடி தூரத்தில் ஒரு கைத் துப்பாக்கி கிடந்தது.

ஸ்லேட் தலையைத் திருப்பிக் கேட்டார்:

''டாக்டர், வாயில் பவுடர் மார்க்குகள்?''

கால்களை அகல விரித்துக் கொண்டு நின்ற டாக்டர் தலையசைத்தார்.






''அவன் துப்பாக்கிக் குழலைப் பலமாகக் கடித்துக் கொண்டிருக்க வேண்டும்; ஏனென்றால், மிகக் கீழிருந்து சுட்டுக் கொண்டிருக்கிறான்...... இறந்து பதினொன்று அல்லது பன்னிரண்டு மணிநேரம் ஆகியிருக்கும், நான் முதலில் அவனைச் சோதித்தநேரத்திலிருந்து.''

''நாங்கள் அவனைப் பார்த்தபோது விளக்கு எரிந்து கொண்டிருந்தது'' என்றார் ஜாரட்.

ஸ்லேட் மேலே பார்த்தார். சவத்துக்கு நேர் மேலே மின்சார விளக்கு இருந்தது.

''தன்னைத் தானே சுட்டுக் கொள்ள விசித்திரமான இடம், விளக்குக்கு அடியில். விளக்கு எரிந்து கொண்டிருந்தது என்பதும் ஆச்சரியம்தான்'' என்றார் ஸ்லேட்.

ஜாரட் அலட்சியமாய்த் தோள்களைக் குலுக்கினார்; அவருடைய கண்கள் சுருங்கின: ''இருட்டுக்குப் பயந்திருப்பான். தற்கொலை செய்து கொள்கிறவன் மனப் போக்கு உங்களுக்குத் தெரியாதா?''

ஸ்லேட் யோசனையோடு தலை அசைத்தார். ''ஆம்; அப்படித்தான் இருக்க வேண்டும்'' என்றார்.

செத்தவனைப் பார்க்கச் சகிக்கவில்லை. அவனுடைய பழுப்புத் தலை மயிர் ரத்தத்தில் தோய்ந்து சடையாகியிருந்தது. அச்சம் பிடித்தது போன்ற அவன் உருவம் சுருண்டு கிடந்தது. கண்கள் திறந்தபடியிருந்தன; வியப்பை வெளியிடுபவை போல் அவற்றில் கண்ணாடி ஒத்த பளபளப்பு இருந்தது. நீண்ட மூக்கு; சரநைப்புடன் மின்னியது; மேலே கூம்பிய முன் நெற்றியிலும் அதே மாதிரி நைப்பு காணப்பட்டது. அழுக்காடை; பழைய நீல ஸாக்ஸில் இருந்த கிழிசல்களை மறைக்க ஸ்லிப்பர்களால் முடியவில்லை.

ஸ்லேட் எழுந்தார்.

''ரைட் டாக்டர், அவனைச் சுத்தம் செய்யுங்கள். நான் பிறகு வருகிறேன்'' என்றவர் ஜாரட்டிடம் கேட்டார்: ''பிணத்தை முதலில் பார்த்தது யார்?''

''நாங்கள். வீட்டைக் கூட்டிச் சுத்தம் செய்கிறவள் மணியடித்துப் பார்த்துப் பதில் கிடைக்காமல் இருக்கவே ஸ்டேஷனுக்கு வந்தாள். அவள் பக்கத்து அறையில் இருக்கிறாள். நீங்கள் அவளைப் பார்ப்பது நல்லது. மிஸஸ் கார்டர் என்று பெயர் — விதவை.''

மிஸஸ் கார்டர் கட்டையாய்க் கொழுகொழுவென்று இருந்தாள். எப்போதுமே வியப்பில் ஆழ்ந்தவை போன்று விழிக்கும் பெரிய கண்கள். உயரமான கறுப்புத் தொப்பிக்கு அடியில் புகை நரை மயிர்க் கற்றைகள் தெரிந்தன. அவளுடைய புருவங்கள் நேராக இருந்ததால் அவளுடைய முகத்தில் ஒரு கோமாளித் தன்மை தோன்றியது. ஒரு கரும் பழுப்புக் கோட்டு அவளுடைய உருவத்தை முற்றிலும் மறைத்தது. இரண்டு இன்ஸ்பெக்டர்களும் அறையில் நுழைந்தபோது, அவள் ஒரு நாற்காலியின் முனையில் விரைப்பாக அமர்ந்து சார்ஜன்ட் வெயிட்டின் பருத்த உடலைச் சந்தேகத்துடன் பார்த்துக் கொண்டிருந்தாள்.

''மிஸஸ் கார்டர், ஸ்காட்லாண்ட் யார்டிலிருந்து இன்ஸ்பெக்டர் ஸ்லேட் வந்துள்ளார்.

''தங்களிடம் சில கேள்விகள் கேட்க வேண்டுமாம்'' என்றான் வெயிட்ஸ்.

''ஸ்காட்லாண்ட் யார்டிலிருந்தா? கடவுளே!'' என்று அவள் சற்றுக் குனிந்து வணக்கம் தெரிவித்தாள்.

''மிஸஸ் கார்டர், உட்காருங்கள்'' என்றார் ஸ்லேட் புன்னகையுடன். ''சரி, மிஸ்டர் ஹேலினுக்காக இந்த வீட்டைக் கவனித்துக்கொண்டது நீங்கள்தான் இல்லையா?''

''ஆமாம் சார். தினம் காலை எட்டரை மணிக்கு வருவேன். வீட்டைச் சுத்தம் பண்ணி மத்தியானத்துக்கு ஏதாவது சமைத்து வைப்பேன். ஞாயிற்றுக் கிழமை லீவு. வரமாட்டேன்.''

''எப்போது திரும்புவீர்கள்?''.

''சுமார் ஒரு மணிக்கு. பத்து தேய்த்த பிறகு. சனிக் கிழமைகளில் இரண்டு மணி வரைகூட இருப்பதுண்டு.''

''மிஸ்டர் ஹேலின் காலை நேரத்தில் வெளியில் போவதில்லையா?''

''அவரா?'' — கேள்வி அவளுக்கு வியப்பு அளித்தது. ''அவர் எங்கேயும் வெளியில் போவதில்லையே. கருமிகள் வெளியே போக மாட்டார்கள். போவார்களா சார்?'' என்றாள் தெரிந்தவள் போல்.

ஸ்லேட் புன்னகை செய்தார். ''ஹேலின் ஒரு கருமியா, மிஸஸ் கார்டர்?''

''எல்லோருக்கும் அது தெரியும் சார்.'' ஸ்காட்லாண்ட் யார்டிலிருந்து வந்த ஆளுக்கு இந்தத் தகவல்கூடத் தெரியவில்லையே என்று அவளுக்கு ஆச்சரியம். ''எங்கேயும் வெளியே போக மாட்டார், ஒன்றும் செய்ய மாட்டார், சாமான்கள் விலை பற்றி எந்நேரமும் முணுமுணுத்தபடி இருப்பார். அந்த அறையில் அவர் என்னை விடுவதே யில்லை'' என்று சுவர் பக்கம் காட்டினாள் அவள். ''அங்கேதான் இரும்புப் பெட்டி இருக்கிறது.''

''அப்படியா? எவ்வளவு காலமாக இங்கே வேலை செய்கிறீர்கள்?''

''இரண்டு வருஷம் இருக்கும். அவர் டெலிபோன் வைத்ததும் வந்தேன். பேப்பரில் விளம்பரம் போட்டார். நான் எழுதினேன். ஆனால் ஹேலின் ஒரு மாதிரி. நினைத்ததைச் சாதித்துக் கொள்வார். காரியம் எல்லாம் நேரப்படி டாண் என்று நடக்க வேண்டும். ஆனா வேலை வாங்குவதில் கெட்டிக்காரர். நான் என்னமோ பழகி விட்டேன்.''

''அவர் சொந்த விஷயங்களை உங்களிடம் பேசுவதில்லையா? உங்களுடன் நெருக்கம் இல்லையா? தனி மனிதர்தானே?''

கறுப்புக் கையுறைகளை வெறுப்புடன் ஆட்டினாள் அவள்.

''உண்டு, இல்லை என்று அவரிடம் பதில் வாங்குவதே பெரிய வேலை. சில சமயம் ரொம்ப முணுமுணுப்பார். நோட்டீஸ் கொடுத்து விடலாமா என்று நான் பல தடவை யோசித்ததுண்டு.''

தன் கேள்விக்குப் பதில் கிடைத்து விட்டதால் ஸ்லேட் சமாதானம் செய்து கொண்டார். ''ஹேலின் சமீபத்தில் கவலையாக இருந்தாரா?''

முகத்தைச் சுருக்கி யோசனை செய்தாள் கார்டர்.

''சில நாட்களுக்கு முந்தி ஒரு மாதிரி இருந்தார். டாக்டர் பெல் வந்து பார்த்தார்.''

''அவர் டாக்டரைப் பார்த்தாரா?''

''டாக்டர் பெல் இரண்டு தடவை வந்தார் என்று ஞாபகம். இரண்டு நாட்களுக்கு முந்திக் கடைசியாக வந்தார்.''

''ஹேலினுக்குக் கடிதப் போக்குவரத்து அதிகம் உண்டா? அதாவது அவருக்கு அதிகக் கடிதங்கள் வருமா?''

''எனக்குத் தெரியாது, சார். முதல் தபால் காலையில் நான் வருவதற்கு முன்னால் வந்து விடும். இரண்டாவது தபாலில் ஒன்றும் வராது. சில சமயம் பில்கள் வரும்.''

ஸ்லேட் மிஸஸ் கார்டரை இன்னும் கொஞ்ச நேரம் காத்திருக்கும்படி வேண்டிக் கொண்டு ஜாரட்டுடன் ஹாலுக்கு வந்தார்.

''ஹூம்?'' என்றார் ஜாரட்.

''ஹேலின் கருமி என்ற விஷயம் எப்படிப் பரவியது என்று தெரிகிறது. ஆனால் இம்மாதிரி மனிதன் தற்கொலை செய்து கொண்டதுதான் ஆச்சரியம் — ஏதாவது நிலை இருந்திருக்க வேண்டும். தனிமையாக வசித்ததால் பிரமை ஏற்பட்டிருக்கலாம். ஆனால், டாக்டர் பெல்லைப் பார்த்தால் இந்த விஷயங்கள் தெளிவுபட்டு விடும்.''

டிராயிங் ரூம் கதவைத் திறந்துகொண்டு சர்ஜன் ஹெப்பின் ஓர் அழுக்கு டவலுடன் வந்தார்.

''ஒரு சாய்வு நாற்காலியில் அவனைச் சாய்த்திருக்கிறேன்'' என்று அறிவித்தார்.

ஸ்லேட்டும் ஜாரட்டும் மீண்டும் அந்த அறைக்குள் நுழைந்தார்கள். கழுவிய பிறகு செத்தவனின் முகம் வெளிர் சிவப்பாயிருந்தது. வாயின் வலது கோடியில் ரோமங்களுள்ள பாலுண்ணி இருந்தது. தாடையைச் சரியாக வைத்துத் துணியால் கட்டப்பட்டிருந்தது. அதனால் உதடுகள் அருவருப்பாக விரிந்து கிடந்தன. மேஜைமீதிருந்த ஒரு சாஸரில் பொய்ப் பல் செட் ஒன்று இருந்தது. ஸ்லேட் அதைக் கவனித்தார். மேல் வரிசைப் பற்களின் பிளேட் குண்டடி பட்டுச் சேதமாகியிருந்தது. பவுடர் மார்க்குகளும் இருந்தன. சாஸருக்குப் பின்னால் தங்கப் பிரேம் போட்ட மூக்குக் கண்ணாடி இருந்தது.

''தரையில் சடலத்துக்கு அருகில் அது கிடந்தது'' என்றார் ஜாரட்.

ஸ்லேட் செத்தவனின் உடையில் இருந்த பைகளையெல்லாம் துழாவினார். ஒரு சிறுவை, சில நாணயங்கள், ஒரு சாவிக் கொத்து ஆகியவற்றை வெளியில் எடுத்தார். சிறுவை இருந்த சிறு பையிலிருந்து ஒரு கடிதம் கிடைத்தது. டாக்டர் பெல் எழுதிய கடிதம். சொன்னது போல் முன்னாள் காலையில் வர முடியாததற்கு வருந்துவதாகவும், மறு நாள் காலையில் வருவதாகவும் டாக்டர் பெல் எழுதியிருந்தார்...

''ஆக, பெல் இன்று வருகிறார். நல்லதுதான். உணவு வேளைக்குள் காரியம் முடிந்து போகும்'' என்றார் ஸ்லேட்.

''ஆமாம்'' என்றார் ஜாரட்.

ஸ்லேட் சுவரோடிருந்த ஓர் இரும்புப் பெட்டியை நெருங்கினார். கனமான ஒரு பழுப்புத் திரையால் அது மூடப்பட்டிருந்

G.E.C. 'எவரெஸ்ட்'

மின்விசிறிகள் ஏன் மிகச் சிறப்பாக உழைக்கின்றன. காரணம், ஜிஇஸியின் அகில உலக தொழிற்கலை நுண்ணறிவுடன் இவை தயாரிக்கப்படுகின்றன. 'எவரெஸ்ட்' மின்விசிறிகள நன்கு உழைப்பதுடன் அழகிய தோற்றமும் கொண்டவை.

**ஜிஇஸி எவரெஸ்டின் சிறப்பு அம்சங்கள்:**

* ஓசையற்ற அமைதியான உழைப்பு
* மறுபடியும் வர்ணப்பூச்சு தேவையில்லை
* ஆண்டுக்கணக்கில தொந்தரவற்ற சேவை.



தென்றலின் சுகமும் எழிலான வாழ்வும் பெற 'எவரெஸ்ட்' மின்விசிறிகளை உபயோகியுங்கள்.




G.E.C.

தி ஜெனரல் இலக்ட்ரிக் கம்பெனி ஆஃப் இந்தியா லிமிடெட் கல்கத்தா . கௌஹாத்தி . புவனேஸ்வர் பாட்னா . கான்பூர் புதுடில்லி . சண்டிகர் . ஜெய்ப்பூர் பம்பாய் . அஹமதாபாத் . நாகபுரி . ஜபல்பூர் . சென்னை கோயம்பத்தூர் . பெங்களூர் . சிக்கந்தராபாத் . எர்ணாகுளம்

KALPANA G.E.C.504 TAM

# உங்கள் குழந்தை பள்ளி செல்கின்றதா? வெற்றிகரமான வாழ்வைத் தெம்புடன் தொடங்க ஃபெர்ராடால் கொடுங்கள்

உங்கள் செல்வன் பிள்ளைப் பிராயத்தில், படிப்பிலும் விளையாட்டிலும் சிறந்து விளங்க அதிக சக்தி மற்றும் அதிக ஆற்றல் பெற்றிருக்கவேண்டும்.

அந்த அனைத்தையும் அளிப்பது ஃபெர்ராடால் ஒன்றுதான். இதனால், சரியான விகிதத்தில் இரும்புச் சத்து, விடமின்கள் மற்றும் தாதுச் சத்துக்கள் உங்கள் செல்வனுக்குக் கிடைக்கின்றன.

ஃபெர்ராடாலில் உள்ள சத்துக்கள் உங்கள் செல்வனின் உடல் உறுப்புகள் ஆக்கம் பெற்று ஆரோக்கியமுடன் வளர மிகமிக அவசியமானவை.

உங்கள் குழந்தைக்குக் காலையிலும், இரவிலும், நேரடியாக பாட்டிலிலிருந்தோ அல்லது பாலுடன் கலந்தோ, ஃபெர்ராடால் கொடுங்கள்.

சுவையிருக்கட்டும், குடும்பம் முழுமைக்கும் குறையாத ஆரோக்கியம் தருவது ஃபெர்ராடால்.






## ஃபெர்ராடால்®

**சுவையில் சிறந்தது— குடும்பம் முழுமைக்கும் குறையாத ஆரோக்கியத்திற்கு**

பார்க-டேவிஸ் தயாரிப்பு

● ரெஜிஸ்டர்டு ட்ரேட்மார்க், ரெஜிஸ்டர்டு யூஸர்ஸ்: பார்க்-டேவிஸ் (இந்தியா) லிமிடெட், பம்பாய்-72 ஏ.எஸ்.

JAISONS – 418

தது. பல சாவிகளால் முயன்ற பின் ஒரு சாவி அதைத் திறந்தது.

அவர் வியப்புடன் கத்தினர்: ''ஹலோ, ஜாரட், பெட்டி காலியாக இருக்கிறதே?''

''காலியா?'' என்று ஜாரட்டும் அந்த இடத்துக்கு விரைந்தார். ஸ்லேட்டின் தோள் மீதிருந்து எட்டிப் பார்த்தார்: ''சுட்டுக் கொண்டதற்கு இதுதான் காரணமாக இருக்கும். உங்கள் அபிப்பிராயம் என்ன?''

''இருக்கலாம்'' என்ருர் ஸ்லேட் பட்டும் படாமலும். பிறகு அவர் அறைக்கு மறு பக்கம் இருந்த பீரோவைத் திறந்து டிராயர்களையும், கள்ளப் பெட்டிகளையும் அலசினர்.

''இதைத் தவிர வேறொன்றும் இல்லே'' என்று அவர் பாங்கு பாஸ் புத்தகத்தைக் காட்டினர். ''அவன் கணக்கில் அதிகப் பணம் காணேம். ஐம்பது பவுன்தான்.''

''என்ன பாங்க்?''

''லண்டன் அண்ட் நார்தர்ன் கவுண்டீஸ். அவர்களைப் போனில் கூப்பிட்டுக் கேட்கலாம்.''

''ரைட்; நான் கேட்கிறேன்.'' என்று ஜாரட் அறையிலிருந்து வெளியே போனர்.

ஸ்லேட் முதுகை நிமிர்த்தி அறை முழுவதும் கண்ணேட்டம் விட்டார். கோட் ஸ்டாண்டுக்கு எதிரில் ஒரு தோல் பெட்டி இருந்தது. அதைக் குடைந்தார். பில்களும் ரசீதுகளுமே இருந்தன. அவற்றை வைத்து விட்டுத் துப்பாக்கியை எடுத்துப் பார்த்தார். பிறகு ஒரு ஜாடியின் அடியில் துருத்திக்கொண்டிருந்த ஓர் அட்டைத் துண்டு மீது அவர் பார்வை விழுந்தது. அதை எடுத்துப் பார்த்தார்.

மிஸஸ் டபிள்யு. என். கெம்ப்,
34, கடோகன் பார்க், டபிள்யு 2.

என்று அதில் அச்சிட்டிருந்ததை அவர் படிக்கும்போது ஜாரட் உள்ளே வந்தார்.

''ஐந்து வருடங்களாகவே ஹேறலின் கணக்கில் அதிகப் பணம் இல்லே என்று பாங்க் மானேஜர் சொல்கிருர். அப்போது அவன் ஒரு பெரும் தொகையை — பல ஆயிரங்கள்—பாங்கிலிருந்து டிரா பண்ணி விட்டானும். பணத்தைத் தானே காபந்து செய்ய எண்ணினனும். அச்சமயம்தான் சுவரில் இரும்புப் பெட்டியை அவன் பொருத்தி யிருக்க வேண்டும். அவனுக்குத் துப்பாக்கி லேசென்சும் இருக்கிறது. கையில் என்ன? விசிட்டிங் கார்டா? ஆம், கதையில் வரும் பெண்'' என்று ஜாரட் நகைத்தார். ''நீங்கள் வாசலில் பார்த்தீர்களே, டாட்மன் நேற்றிரவு ஒன்பதரை மணிக்கு இங்கிருந்து அவள் வெளியே போனதைப் பார்த்தான். சுமார் ஒன்பதரை மணிக்கு.''

ஸ்லேட் மற்றவனேக் கூர்ந்து பார்த்தார். ''ஒன்பதரை மணிக்கா? — தற்கொலே நடந்த நேரத்தில்.''

தற்கொலே என்று அவர் ஒரு மாதிரி நிறுத்திப் பேசியதை ஜாரட் கவனித்தார். இருவருடைய கண்களும் கலந்தன. ஏக காலத்தில் ஒரே எண்ணம் இருவருடைய உள்ளத்திலும் தோன்றியிருக்க வேண்டும்.

''ஒன்பதரை மணிக்கு முன்னுல் இருக்கலாம்'' என்ருர் ஜாரட் பிடிவாதமாய். ''ஹேறலின் யாரோடும் பழகாத சிடுமூஞ்சி என்றாலும் ஒரு பெண்ணுக்கு முன்னுல் சுட்டுக் கொள்வானு?''

ஸ்லேட் இறந்தவனின் கண்ணாடியான முகத்தை உற்றுப் பார்த்தார்: ''தற்கொலே தான் என்று உனக்கு உறுதிப்பட்டு விட்டதா, ஜாரட்?''

ஜாரட் விழித்தார்.

''என்னதான் சொல்கிறீர்கள்? ... தற்கொலேயல்லாமல் வேறென்ன இது? வாய்க்குள் துப்பாக்கி வைத்துச் சுடும்வரை ஒருவன் சும்மா இருப்பானு? அந்த ஸ்த்ரீ... யாரவள்? மிஸஸ் கெம்பை அப்படிச் செய்யும்படி ஹேறலின் தூண்டியிருப்பான் என்கிறீர்களா?''

ஸ்லேட், ''இரும்புப் பெட்டி காலியாக இருக்கிறதே!'' என்று சுட்டிக் காட்டினர்.

ஜாரட் யோசித்தபடி கூறினர்: ''உண்மை. அந்த ஸ்திரீயின் கையில் உங்களிடம் இருப்பதை விடப் பெரிய தோல் பை இருந்ததாய் டாட்மன் சொன்னன். ஆயினும், தற்கொலேயாக இருந்தால்...''

''கொள்ளே யடிக்கப்பட்டதால் ஹேறலின் தற்கொலே செய்து கொண்டிருப்பானே?'' என்ருர் ஸ்லேட்.

''இருக்க முடியாது. அந்தக் கார்டைப் பார்த்தீர்களா? ஹேறலின்தான் அவளே உள்ளே விட்டான். கார்டு மேஜை மீது கிடந்தது. அவள் தப்புக் காரியம் செய்தவளானல் மேஜையின்மீது கார்டை விடுவாளா?''

ஸ்லேட் சற்று மௌனமாயிருந்த பிறகு, ''டாட்மனேக் கூப்பிடு'' என்ருர்.

ஆனல் கான்ஸ்டபிள் டாட்மனிடமிருந்து அதிகப்படி விவரம் ஒன்றும் கிடைக்கவில்லே. முன்னுள் இரவு ஒன்பதரை மணிக்கு அவன் தன் பீட்டில் இந்த வீட்டைக் கடக்கும்போது கதவைத் திறந்து கொண்டு ஒரு மாது வெளியில் வந்தாள். அவள் கையில் ஒரு பெரிய தோல் பை இருந்தது. நிலவு வெளிச்சத்தில் அவளேப் பார்க்க அவன் திரும்பினன். ஆனல் முதுகுப் பக்கம்தான் தெரிந்தது. அவள் வீதியின் எதிர்ப் பக்கம் சென்று, எதிர்த் திசையில் விரைவாகப் போய்விட்டாள். கரும் பழுப்பு கம்பளிக் கோட் போட்டிருந்தாள். தலேயில் ஒரு சிறிய தொப்பி. வீட்டுக்கு முன்னுல் விளக்கு வெளிச்சம் இருந்ததா என்று ஸ்லேட் கேட்டதற்கு 'இல்லே' என்று டாட்மன் பதில் கூறினன்.

டாட்மன் போன பிறகு ஸ்லேட், ''ஹேப்பின் அனுவசியமாக இங்கே ஏன் காத்திருக்க வேண்டும்? அவர் போகட்டும். பிற்பகலுக்குள் அவருடைய அறிக்கை கிடைக்க வேண்டும்'' என்ருர்.

''நான் அவரிடம் சொல்கிறேன்'' என்று ஜாரட் வெளியே போனர்.

தனியாக இருந்த ஸ்லேட் அறையில் அங்கு மிங்கும் நடக்கலானர். அவருடைய இரு கைகளும் டிரவுஸர் பாக்கெட்டுகளில் புதைந்திருந்தன. ஒரு புதிரை விடுவிக்க முயலுபவர் போல் அவர் யோசனையில் இருந்தார். செத்தவனே மறுபடியும் ஒரு முறை பார்த்தார். துப்பாக்கியில் கைரேகைச் சின்னம் இருக்கிறதா என்று ஆராய்வது வெறும் கால விரயம்தான். அதன்மீது செத்தவனின் கை ரேகைகள்தான் பதிந்திருக்கும்.

திடீரென்று அவருக்கு ஒரு புதிய எண்ணம் உண்டாயிற்று. அவர் யோசித்தபடி அப்படியே நின்றபோது ஜாரட் உள்ளே வந்தார்.

''ஜாரட்! நீ ஸ்டேஷனுக்குப் போன் செய்து ஹேலின் பெயரில் பதிவு செய்யப் பட்ட துப்பாக்கியின் நம்பர் என்ன, அது என்ன மேக் என்று கேள்'' என்றார் ஸ்லேட்.

ஜாரட்டின் முகம் கோணியது. ''என்ன விஷயம்?'' என்று கேட்டார் ஐயத்துடன்.

''முதலில் அந்த விவரங்களைச் சொல்லு; பிறகு நான் சொல்கிறேன்.''

ஜாரட் முணு முணுத்தார். அவர் போன் செய்ய வெளியே சென்று சற்று நேரத்தில் திரும்பியபோது ஸ்லேட் மேஜை நுனியில் அமர்ந்து துப்பாக்கியைப் பார்த்துக் கொண்டிருந்தார்.

''என்ன?''

''உங்களுக்குத்தான் வெற்றி'' என்றார் ஜாரட் அசுவாரசியமாய். ''அவன் பெயரில் பதிவு செய்யப்பட்டது ஒரு ரிவால்வர்... கோல்ட் வகை. நம்பர் எம் 8962. பழைய மாதிரி துப்பாக்கி. இப்போது அம்மாதிரித் துப்பாக்கிகள் செய்வதில்லை.''

''இதைப் பார்க்கிறாயா?'' என்று துப்பாக்கியின் மேல் பாகத்தைக் காட்டினார் ஸ்லேட். ஜாரட் குனிந்து பார்த்தார். ''இதன் நம்பரை அரத்தால் தேய்த்திருக்கிறார்கள். யாரோ திட்டமிட்டு வேலை செய்திருப்பார்கள் என்று தோன்றுகிறது.''

ஜாரட் நிமிர்ந்தார். தாடையைப் பலமாகத் தடவிக் கொண்டார். ''அவனே புதிய துப்பாக்கி வாங்கி யிருக்கலாம்'' என்றார். ஆனால் அவர் குரலில் உறுதி இல்லை. வீம்புக்குப் பேசினாற் போலிருந்தது.

ஸ்லேட் தலையை ஆட்டினார். ''சட்ட பூர்வமாகத் துப்பாக்கி வைத்துக் கொண்டு பழக்கப்பட்ட ஒருவன் திடீரென்று ஒரு புதிய துப்பாக்கி வாங்கி ரகசியமாக வைத்துக் கொள்ள மாட்டான். இது ஹேலின் துப்பாக்கியாக இருந்தால் கட்டாயம் பதிவு செய்திருப்பான். பழைய துப்பாக்கி அவன் பெயரில் பதிவு செய்தபடிதானே இருக்கிறது? உரிய காலத்தில் லைசென்ஸ் பணம் கட்டினானா?''

''கட்டிவிட்டான்'' என்றார் ஜாரட் மனமில்லாமல்.

''அப்படியானால் அந்த கோல்ட் துப்பாக்கி இங்குதானே இருக்கவேண்டும்?... ஒருகால்.''

''ஒருகால் என்ன?''

''ஒருகால் ஹேலினைக் கொலை செய்தவன் அதை எடுத்துக் கொண்டு போயிருக்கலாம்!''

ஜாரட் விர்ரென்று திரும்பினார். ''அப்படியானால் ஸ்லேட், இதைக் கொலை என்று நினைக்கிறீர்களா?''

# ---------------------------- பாடிக் கேளுங்கள்,...

## கீர்த்தன மாலை (மூன்றும் பாகம்)

நினைந்(து)என்னை அடித்தாலும் மிதித்தெடுத்(து)
அணைத்தாலும்
என்ன செய்தாலும் எந்தன் துணை நீயே.

*  *  *

குற்றமில் மன்மதன்மேல் எரிந்துவிழுந்தான்-உந்தன்
குறுநகை கண்டன்றோ நினைந்தணிந்தான், கௌரி

*  *  *

செஞ்சடாடவியிலே கங்கை எனும் தெய்வ நதி
தோயுமாம்
சீறும் அரவம் அதில் நெளியுமாம் ஒரு
சிற்றம்புலியும் பாயுமாம்
நஞ்சணிந்த நீலகண்டமாம் வெண்ணீறணிந்த
திருமேனியின் ஒளியாம்

*  *  *

கயிலை விட்டு மயிலை வந்த கருணை யொன்றே
போதாதோ?

*  *  *  *

மலரே இருவிழி பங்கஜ மலரே திருமுகமும்
மலரே இரு கரம் தாமரை மலரே திருவடிகள்
மந்தஹாஸமும் தவழ்ந்த ஸுந்தர முகார
விந்தம் நினைந்து
எனது உள்ளமே நிறைந்த(து) இன்ப வெள்ளமே

காவிய உள்ளமும் பக்தி பக்குவமும் மொழி வாகவமும் மேற்கண்ட மேற்கோள்களில் அப்படியே ஊறி யிருக்கின்றன அல்லவா? கவிதை என்ற முறையிலே இவற்றுக்கு முழுப் பெருமையும் உண்டு. ஆனால் இவற்றின் முழுப் பெருமை கவிதை என்பதில் மட்டும் அடங்கி விடாது. பிறக்கும்போதே கருத்து, மொழி இரண்டும் பாலும் சுவையும்போல் கூடியிருப்பது கவிதை. இவ்விரண்டுக்கும் அதிகமாக சங்கீதமும் – ராகமும் – தாளமும் சேர்ந்து ஜனித்துவிட்டால் கவிதை கீர்த்தனமாகி விடுகிறது. அப்போது கவி என்பவன் சாகித்திய கர்த்தனாக, வாக்கேயக்காரனாக உயர்ந்து விடுகிறான். சாகித்திய கர்த்தர் என்றும் வாக்கேயக்காரர் என்றும் கூறுவதற்குப் பூரண தகுதி வாய்ந்த மகா பாக்கியசாலி ஸ்ரீ பாபநாசம் சிவன் அவர்கள். பாட்டு முதலில் வந்திருக்குமா, மெட்டு முதலில் வந்திருக்குமா என்றே சொல்லத் தெரியாமல் இரண்டும் சேர்ந்து பிறக்கும் உன்னத இசையம்சத்தைப் பிரம்மஸ்ரீ பாபநாசம் சிவனின் பாடல்களில் ரசித்துச் சொக்குகிறோம். இந்த நூலில் உள்ள நூற்றியொரு பாடல்களில் பல இடங்களில் இப்படி ஓர் உயர்ந்த இசை அம்சத்தைக் கண்டு ஆனந்திக்கிறோம். உதாரணமாக,

பூவாழ்வே சதம் என்று பொழுதெல்லாம்
பாழாய்க் கழிந்தது போதாதோ?

என்ற வரிகளைச் செய்யுளாகப் பார்க்கும் போதே நெஞ்சு நெகிழத்தான் செய்கிறது. ஆனால் அதுவே சஹானா ராகத்தில் ('இடை பருது' என்ற கிருதி) வர்ண மெட்டும் பெறும் போது அவலச் சுவை அதன் எல்லையை எட்டி நம்மை உலுக்கி விடுகிறது.

ஐயன் திருவடியை விடமாட்டேன்
யாரென்ன மொழிந்தாலும் ஆவியழிந்தாலும்
வையத்து வாழ்வே மடிந்து முடிந்தாலும்
வானமிடிந்து தலைமீது விழுந்தாலும்
ஐயன் திருவடியை விடமாட்டேன்

என்ற வார்த்தைகளில் உள்ள ஆழ்ந்த பிடிப்பு போன்ற அழுத்தம், அதன் மீது பூர்வி கல்யாணியை வர்ஷிக்கும்போது அசல் கான்க்ரீட்டே ஆகி விடுகிறது. 'விடமாட்டேன்'

ஸ்லேட் தோள்களைக் குலுக்கினார்.

"என் கண்கள் தற்கொலை என்று கூறுகின்றன. ஆனால் என் அறிவு இல்லை, இது கொலை என்கிறது ஜாரட்!"

ஆனால் ஜாரட் தன் தீர்மானத்தை எளிதில் மாற்றிக் கொள்ள விரும்பவில்லை.

"சொந்த புத்தியுள்ள எவனாவது வாயில் துப்பாக்கியை விட்டுச் சுட விடுவானா? வெறும் மடத்தனமாக இருக்கிறதே! உங்கள் அறிவு அப்படிச் சொல்கிறது என்றால், அது..."

"ரைட். என் அறிவு அப்படி ஒன்றும் சொல்லவில்லை."

"என்னதான் சொல்கிறீர்கள்?"

"சுயபுத்தியுள்ள எவனும் வாய்க்குள் துப்பாக்கியை விட்டு எதிரி சுடும்வரை பேசாமலிருக்க மாட்டான் என்றுதான் என் அறிவும் சொல்கிறது."

"பின்? அவனுக்கு மயக்க மருந்து தந்து, பிறகு..."

"இல்லை. இருந்தால் ஹெப்பின் கண்டுபிடித்திருப்பார். இஞ்செக்ஷன் செய்திருக்கலாம் என்றால் எங்கும் அதற்கான அடையாளம் இல்லை. பார்த்து விட்டேன்" என்றார் ஸ்லேட்.

ஜாரட் கிண்டலாகப் பேசினார். ஆனால் ஸ்லேட் பொருட்படுத்தவில்லை.

"ஸ்காட்லாண்ட் யார்ட் மரபைக் காப்பாற்றுகிறீர்கள், ஸ்லேட். மிக நுட்பமான விஷயம்; உங்கள் அறிவு முன்னுக்குப் பின் முரணாகப் பேசுகிறது. முதலில் அது கொலை என்கிறது. பிறகு கொலையாக இருக்க முடியாது என்கிறது. ரொம்ப மோசம்!"

"அப்படித்தான் தோன்றுகிறது. ஆனால் இந்த முரண்பாட்டில் உண்மை சிக்கியுள்ளது" என்று ஸ்லேட் சிரித்தார்.

"ஸ்லேட், நீங்கள் அறிவை நீதி முறை தவறாமல் பயன்படுத்த விரும்பினால், நான் நடப்பு முறை பிசகாமல் இருக்க விரும்புகிறேன். நாள் முழுவதும் பிணத்தை இங்கே வைத்திருக்க முடியாது. ஆஸ்பத்திரிக்குப் போன் செய்கிறேன். ஆம்புலன்ஸ் அனுப்புவார்கள். பிணத்தைக் கிடங்குக்கு எடுத்துக் கொண்டு போகட்டும்."

"டாக்டர் பெல் வருகிறார். மறந்து விடாதே. அவரால் நமக்கு ஏதாவது உதவி கிடைக்கும்."

"எனக்கு நம்பிக்கை இல்லை. ஆனால் எதற்கும் அவர் வரும்வரையில் பார்ப்போம்" என்று ஜாரட் வெளியேறினார்.

ஸ்லேட் மீண்டும் தனிமை பெற்றார். அவருடைய முகத்திலிருந்த புன்னகை மறைந்தது. விஸிட்டிங் கார்டைக் கையில் எடுத்தார். ஆனால் தலையை ஆட்டியபடி அதைக் கீழே வைத்தார். கைக்குட்டையை மேலே போட்டுத் துப்பாக்கியைப் பிரித்துப் பார்த்

## ...படித்துப் பாருங்கள்

என்பதற்கு 'ஸரிகரிகா' எத்தனை வலுவு கொடுக்கிறது?

'உனை நம்பி ஏமாந்தேன் ஐயா' என்று சக்கரவாகத்தில் அமைந்த நிந்தா ஸ்துதிப் பாடல் வெகு அழகு. அதில் பிறை சூடிய பெம்மானை 'குறைமதி கொண்டவன்' என்று இரு பொருள்படக் கூறியிருப்பது அதி நயம்.

> கமழ் மணமும் உன்து மெல்லிய மேனியும்
> கண்டு முகுந்தன் உனைச் சிரமேற் கொண்டான்

என்று துளசியைத் துதிக்கும் 'பரதேவதையே' என்ற கிருதி தியாகையரின் 'அம்மா ராவம்மா'வை அடியொற்றியது.

இங்கு தந்திருக்கும் மேற்கோள்களைப் பார்த்தால் ஓர் உண்மை தெள்ளெனத் தெரியும். நாக்குக்கு மொழி துளிகூட இடக்குச் செய்யாமல் எப்படித் தேனொழுக்காக இருக்கிறது, பாருங்கள். தனித்தமிழ், பச்சைத் தமிழ் என்ற வீம்புகள் இல்லாமல் லலிதம் ஒன்றையே மனத்தில் கொண்டு பிரம்மஸ்ரீ சிவன் எவ்வளவு அழகான பாடல்களை யாத்திருக்கிறார்கள்? எத்தனை வித உணர்ச்சிகள்! அவற்றுக்கேற்ற எத்தனை விதமான ராகங்கள்? தீக்ஷிதர் கிருதிகளை நினைவூட்டும் 'ஸ்ரீ விச்வநாதம் பஜே' (பைரவி) என்ற கம்பீரமான சம்ஸ்கிருதக் கிருதியிலிருந்து, மெல்லிசையின் அழகுகள் கொண்ட 'ராமனை பஜி' (மாண்டு) வரையில் பலதரப்பட்ட பாடல்களைப் பார்க்கிறோம்.



நூலின் முகவுரையில் ஸ்ரீ எஸ். ஒய். கிருஷ்ணஸ்வாமி அவர்கள் கூறியிருப்பது போல் இசையும் வாக்கும் உடன் தோன்றும் சிறப்பு, மத்யம காலத்தின் சரளமான போக்கு, பாட்டுப் பொருளின் பக்தி அடர்த்தி, மொழியின் மதுரம், பற்பல சங்கதிகள் போடுவதற்கு வசதியான பாங்கு இவை யாவும் கொண்ட பத்தரை மாற்றுத் தங்கப் பாடல்கள் நூற்றினைக் கொண்டுள்ளது இந்த நூல். இது வெளிவர நிதி உதவி செய்த தமிழ் நாடு சங்கீத நாடக சங்கத்தையும், தில்லி சங்கீத நாடக அகாதெமியையும் வாழ்த்துகிறோம்.

இன்றைய சாகித்ய கர்த்தர்களிடையே பீஷ்ம பிதாமகராக விளங்கும் பிரம்மஸ்ரீ சிவன் அவர்களின் இப்பாடல் தொகுப்பினை இசை உலகு இரு கைகளையும் நீட்டி வரவேற்கும் என நம்புகிறோம்.

[கிடைக்குமிடம்: 9, ஸ்ரீநிவாசன் தெரு, மந்தைவெளி, சென்னை—28 விலை ரூ. 8.00]

# இவர் பாராட்டுக்குரியவர்

நீங்கள் அனுப்பும் புகைப் படம் இங்கு பிரசுரமாகும்.

**எ**த்தனையோ பேர்களின் படங்கள் பத்திரிகைகளில் வருகின்றன. பாராட்டுக்குரியவர்களின் படங்களுடன் உருப்படியாக எதையும் சாதிக்காதவர்களின் படங்களும் கூடச் சில சமயம் வருகின்றன.

இவற்றையெல்லாம் பார்க்கும்போது ''அடடா, நமது சீதாலட்சுமியைப் பற்றி எழுதுவார் இல்லையே'' என்றோ அல்லது ''ஹரும் ராமகிருஷ்ணன் செய்துள்ள அரிய காரியங்களை மக்களுக்கு அறிமுகப்படுத்துவார் இல்லையே'' என்றோ நீங்கள் ஒரொரு சமயம் எண்ணியிருக்கலாம். அவ்வாறாயின் உங்களுக்கு இதோ ஓர் அரிய சந்தர்ப்பம். உங்களுக்கு நன்கு பழக்கமான ஒருவர் — பாராட்டுக்குரியவர் என்று நீங்கள் கருதும் நபர் — பத்திரிகைகளால் கவனிக்கப்படாதவராய் இருந்தால் அன்னாரைப் பற்றி எழுதி அனுப்புங்கள். அவர் புகைப்படத்தையும் அனுப்புங்கள். எதனால் அவரைப் பாராட்டுக்குரியவராகக் கருதுகிறீர்கள் என்பதைத் தக்க சம்பவ விளக்கங்களோடு எழுதுங்கள். வாசக அன்பர்கள் எழுதும் கட்டுரைகளில் சுமார் பத்து அல்லது பன்னிரண்டு தேர்ந்தெடுக்கப்பட்டுக் கல்கி ஆகஸ்ட் 8உ. இதழிலிருந்து தொடர்ந்து பிரசுரமாகும்.

கட்டுரை கல்கியில் ஒரு பக்கத்துக்குள் அடங்க வேண்டும். பிரசுரத்துக்குத் தேர்ந்தெடுக்கப்படாத கட்டுரைகளையும் புகைப்படங்களையும் திருப்பிப் பெற, அவற்றுடன் போதிய தபால் தலைகளுடன் கூடிய முகவரியிட்ட உறை அனுப்ப வேண்டும். பிரசுரமாகும் கட்டுரைகளுக்குச் சன்மானம் உண்டு. முடிவு தேதி ஜூலை 25.

---

தார். ஆனால் அது ஒழுங்காயிருந்தது. ஒரே ஒரு கேள்வி அவரைப் பதில் வேண்டித் துன்புறுத்தியது. இது கொலை என்றால், ஹேலினுடைய துப்பாக்கி ஏன் பயன்படுத்தப்படவில்லை? இக் கேள்விக்கு நியாயமான பதில், ஹேலினுடைய துப்பாக்கி வேறு எங்கோ பூட்டி வைக்கப்பட்டிருக்க வேண்டும். செத்தவனுடைய பையிலிருந்த சாவிக் கொத்தைப் பற்றும்வரையில் கொலைகாரனுக்கு அந்தத் துப்பாக்கி இருந்த இடம் தெரியவில்லை.

ரிவால்வர் இரும்புப் பெட்டியில் இருக்க முடியாது. பீரோவில் இருந்திருக்கலாம். ஆனால் இப்போது அது எங்கே இருக்கிறது? ரிவால்வரைக் கொலைகாரன் எடுத்துச் சென்றிருக்க முடியாது. அது அவனுக்கு அபாயமானது; இந்த விவகாரத்தில் அபாயத்துக்கு இடமே இல்லாதபடி திட்டம் போடப்பட்டுள்ளது. அறையில் இரும்புப் பெட்டி இருப்பதையும், பீரோவில் துப்பாக்கி இருப்பதையும் கொலைகாரன் அறிந்திருக்கலாம். அவன் மாடிக்குப் போய் ரிவால்வரை ஒளித்து வைத்திருப்பான் என்பது தவறான யூகம். ஆகவே, அந்த ரிவால்வர் இந்த அறையிலோ, பக்கத்து அறையிலோதான் ஒளித்து வைக்கப்பட்டிருக்க வேண்டும்.

ஸ்லேட் அறையைச் சுற்றிலும் மறுபடியும் கண்ணோட்டம் விட்டார். பிறகு திடீரென்று மண்டியிட்டுக் கணப்பின் கிராதியருகில் உட்கார்ந்தார். அடியில் சாம்பல் இல்லை. சில நாட்களாகவே கணப்பு மூட்டப்படவில்லை என்று தோன்றுகிறது. அதைப் பற்றி மிஸஸ் கார்டரை விசாரித்துத் தெளிவுபடுத்திக் கொள்ளலாம். ஆனால் இரண்டொரு கிராதிக் கம்பிகளில் மிக நுணுக்கமான தூசு படிந்திருந்தது. ஒரு வேளை, காற்றில்.....

ஸ்லேட் எழுந்தார். ஜாக்கெட்டைக் கழற்றினார். சட்டைக் கைகளை மடித்து விட்டுக் கொண்டார். கிராதியைத்தாண்டிக்கணப்பின் நெருப்பு மூட்டப்படும் இடத்துக்குப் போனார். புகை போக்கியில் கைவிட்டுத் துழாவினார். முதலில் ஒன்றும் கையில் தட்டுப்படவில்லை. பிறகு கிராதிக் கம்பிகள் மீது ஏறி இன்னும் மேலே புகைபோக்கியில் கையை நுழைத்துத் துழாவினார். ஜில்லென்றிருந்த ஒரு பொருள் கையில் சிக்கியது. அதை எடுத்துக்கொண்டு கீழே இறங்கினார். நுணுக்கமான தூசு படிந்த கோல்ட் ரிவால்வரை உற்றுப் பார்த்தார். அவருடைய தலை ஆடியது. சலனமற்ற சவத்தின் முகத்தைத் திரும்பிப் பார்த்தார். அந்த அறையின் மர்மம்தான் என்ன?

அவருடைய மூளை மிக விரைவாக இயங்கியது. சீக்கிரம் அவர் ஒரு முடிவுக்கு வர வேண்டும். அவ்வாறே செய்தார்.

மறுபடியும் கிராதியைத் தாண்டி எரிமூட்டும் இடத்துக்குப் போனார். புகைபோக்கியில் முன்பு இருந்த இடத்திலேயே ரிவால்வரைப் பதுக்கி வைத்தார். பிறகு மீண்டும் மண்டியிட்டுக் கிராதிக் கம்பிகளில் அவர் கை வைத்ததால் படிந்த மென் தூசியை ஊதி அகற்றினார். அவர் அங்கே சென்ற தடயமே இல்லாதபடி செய்த பிறகு அறையை விட்டு வெளியே வந்தார். பின்பக்கமிருந்த சமையலறைக்குப் போய்க் கைகளைக் கழுவிக் கொண்டு திரும்பினார். ஜாக்கெட்டை மாட்டிக் கொண்டு பீரோவின் மீது கவனம் செலுத்தினார்.

டிராயர்களையும் கள்ளப் பெட்டிகளையும் முன்பே ஆராய்ந்து விட்டார். சுவாரசியமான தடயம் எதுவும் கிடைக்கவில்லை. ஜேகப் ஹேலினுக்கு மிஸஸ் கெம்பைத் தெரியும் என்பதற்கு அடையாளமாகப் பீரோவில் ஒரு பொருளும் காணப்படவில்லை. ஸ்லேட்டுக்கு அது ஆச்சரியமாயிருந்தது. மிஸஸ் கார்ட்டர் கூறிய கதையிலிருந்து, ஹேலின் தனியாள், உடைமையுணர்ச்சி அதிகம் கொண்டவன் என்று தெரிகிறது. 'ஒரு மாதிரி ஆசாமி' என்றார் ஜாரட். 'கருமி' என்றாள் மிஸஸ் கார்டர்.

# இன்னுமொரு குழந்தையைப் பெறுவதற்குமுன் சற்று

# யோசியுங்கள்



முதலில் இந்தக்
குழந்தையை நன்கு
வளர்க்க வேண்டாமா?

சத்துமிக்க பால், ஊட்டம் தரும் உணவு, நல்ல உடை, விளையாட பொம்மைகள், புத்தகங்கள்... இவையனைத்தும் உங்கள் குழந்தைக்குக் கிடைக்க வேண்டும். அதுதானே உங்கள் ஆசை! கஷ்டமோ, நஷ்டமோ இவையனைத்தையும் உங்கள் குழந்தைக்கு அளிக்கத்தான் போகிறீர்கள். ஆனால், இன்னொரு குழந்தை உடனே பிறந்தால் இது முடியுமா? அடுத்த குழந்தை உடனே பிறப்பதைத் தவிர்க்கத்தானே விரும்புவீர்கள்!

நீங்கள் மட்டுமல்ல; உலகெங்கிலும் தம்பதிகள் இவ்விதம்தான் கருதுகிறார்கள். வளமுடன் வளர்க்க வசதிகள் பெருகும் வரை, அவர்கள் இன்னொரு குழந்தையைப் பெறுவதில்லை. நீங்களும் 'நிரோத்' உபயோகித்து குழந்தை பெறுவதைத் தள்ளிப்போடலாம். அனைவரும் விரும்பி ஏற்கும் ரப்பர் கருத்தடைச் சாதனம் நிரோத். இது ஆண்களுக்கானது. தலைமுறை தலைமுறையாக உபயோகத்தில இருந்துவரும் சிறந்த, எளிய, பாதுகாப்பான கருத்தடைச் சாதனம் நிரோத். நீங்களும் நிரோத் உபயோகியுங்கள்.

**நிரோத் எங்கும் கிடைக்கிறது. அரசாங்க ஆதரவு விலை 15 பைசாவுக்கு 3**

**இன்னொரு குழந்தையை வளர்க்க வசதி பெறும் வரை**




# நிரோத் உபயோகியுங்கள்

லட்சக்கணக்கான பேர் விரும்பி ஏற்கும் எளிய, பாதுகாப்பான கருத்தடைச் சாதனம் நிரோத்.

பலசரக்குக் கடைகள், மருந்தகங்கள், வெற்றிலைபாக்குக்கடைகள் எங்கெல்லாம் நிரோத் விற்பனையாகிறது.

ஆனல் யார் இந்த ஸ்ரீமதி கெம்ப்? சடலத்துக்கருகில் மேஜையின்மீது அவளுடைய விசிட்டிங் கார்டு கிடக்கிறது. வீட்டை விட்டுப் போகும் சமயம் ஒரு போலீஸ்காரரை நேருக்கு நேர் பார்த்திருக்கிருள். ஆனல் ஹேலினை யாரும் காண வரும் வழக்கமில்லை. அவனுக்கு உறவா? ...பெரிய தோல் பையுடன் போனுளாம். கிழவனிடம் திருட வந்தவளா? அவனைக் கொலை செய்தவள் அவள்தானா? அவள் கொலை செய்தாள் என்றால், ஹேலினின் வாய்க்குள் அவள் துப்பாக்கியை விட முடிந்தது எப்படி?

இம்மாதிரிப் பல கேள்விகள் அவரைக் குழப்பின. பதில் கிடைக்கவில்லை. அவருடைய முயற்சிகள் பயன் தரவில்லை.

ஜேகப் ஹேலின் கொலையுண்டான் என அவர் தமக்குள் கூறிக் கொண்டார். இரு துப்பாக்கிகள் இருப்பதே இது கொலை என்பதைக் காட்டுகிறது. ஏன்? இரும்புப் பெட்டி காலியாக இருப்பதால் களவு காரணமாயிருக்கலாம். ஆனல் இரும்புப் பெட்டியில் பணம் இருந்தது என்று எப்படி நிச்சயமாய்க் கூற முடியும்?

அவர் கூற முடியாது. இது ஒரு சிக்கல்.

அவர் பீரோவிலிருந்த பிளாட்டரை—மை ஒற்றும் அட்டை — பார்த்தார். அதிலிருந்த பிளாட்டிங் பேப்பர்களைப் புரட்டிப் பார்த்தார். எல்லாம் நறுவிசாக இருந்தன. நடுவிலிருந்த ஒன்றைத் தவிர. அதன் வலது மூலையில் புளு இங்க் அடையாளம் இருப்பதை வியப்புடன் பார்த்தார்.

உடனே எழுந்து அவர் பக்கத்து அறைக்கு விரைந்தார். அங்கு ஜாரட் வெயிட்டுடன் பேசிக் கொண்டிருந்தார். அகல விரிந்த கண்களுடன் மிஸஸ் கார்டர் கேட்டுக் கொண்டிருந்தாள்.

''ஸ்லேட், என்ன சங்கதி?'' என்றார் ஜாரட் திரும்பி.

''அந்த டெஸ்க் மீது ஒரு இங்க் பாட்டில் பார்த்ததாக ஞாபகம். இதோ. இரண்டு பேனுக்களும் இருக்கின்றன... மிஸஸ் கார்டர், ஹேலின் பவுண்டன் பேனவால் எழுதுவதைப் பார்த்திருக்கிறீர்களா?'' என்று கேட்டார் ஸ்லேட்.

அவள் தலையை ஆட்டினள்.

''இல்லை, சார்! கையெழுத்துப் போட வேண்டுமானல் இந்த அறைக்கு வருவார்; மேஜையின் மீது இருக்கிற பேனக் கட்டையால் — நீங்கள் வைத்திருக்கிறீர்களே, அது தான் — கையெழுத்திடுவார்.''

''வீட்டில் வேறு இங்க் இருக்கிறதா?''

''இல்லை, இருக்க முடியாது; அந்தப் பாட்டிலை நான்தான் வாங்கி வந்தேன்.''

''நன்றி, மிஸஸ் கார்டர்.''

ஜாரட் ஸ்லேட்டைத் தொடர்ந்து ஹாலுக்கு வந்தார். ''உங்கள் அறிவு புதிதாக ஏதாவது சொல்கிறதா?''

''இல்லை; முன்பு சொன்னதையே சொல்கிறது. அமைதியாக இருந்தால் அது இன்னும் சுறுசுறுப்பாய் வேலை செய்கிறது. சுற்றிலும் தொந்தரவு இல்லாவிட்டால்...''

ஸ்லேட் சிரித்தவாறு டிராயிங் ரூமுக்குத் திரும்பினர். செத்தவனின் மேற்பார்வையில், சக்தி வாய்ந்த ஒரு பூதக் கண்ணுடியோடு பீரோவுக்குப் பக்கத்தில் உட்கார்ந்தார். அடுத்த அறையில் அவர் பார்த்தது சாதாரண புளு பிளாக் இங்க்; அதாவது எழுதும் போது நீலமாக இருக்கும்; உலர்ந்ததும் கறுப்பாகிவிடும். ஒரே ஒரு பிளாட்டிங் பேப்பரில் அவர் கண்டது புளு இங்க்; அதாவது எழுதும் போதும் உலர்ந்த பிறகும் நீலமாகவே இருக்கும்... வீட்டில் இருப்பதோ ஒரே ஒரு புளு பிளாக் இங்க் பாட்டில்.

பிளாட்டிங் பேப்பரில் மை ஒற்றின கறைபட்ட பகுதியைப் பூதக் கண்ணுடியின் மூலம் மிகவும் ஜாக்கிரதையாகப் பார்த்தார். இரண்டு நிமிடப் பரிசோதனைக்குப் பிறகு 'ஹாட்...ன்... ரோஸ்' என்ற எழுத்துக்கள் விளங்கின. அதற்குமேல் வேறொன்றும் தெளிவாகத் தெரியவில்லை.

பல நிமிடங்கள் வரை அவர் அசையாமல் உட்கார்ந்திருந்தார். புதிய எண்ணம் ஒன்று முளைவிட்டு வளர்ந்துகொண்டிருந்தது. காலிங் பெல் ஒலி அவருடைய கவனத்தைக் கலைத்தது. பிளாட்டரைப் பழையபடி பீரோவிலேயே வைத்து விட்டு வெளியே வாசலுக்குப் போனர். அங்கு ஜாரட், ஸ்டிரெச்சரோடு வந்த இரண்டு பேருடன் பேசிக் கொண்டிருந்தார்.

அதே சமயம் புதிய ஆசாமி ஒருவன் வாயிலில் தோன்றினன். இருவரும் அவனைப் பார்க்கத் திரும்பினர்கள். உயரமான அவன் உடை மிகக் கண்ணியமாயிருந்தது. கையில் மருந்துப் பெட்டி.

வந்தவன் ஒரு கணம் தயங்கினன். ஸ்டிரெச்சரையும் ஜாரட்டையும் மாறி மாறிப் பார்த்தான்.

''எக்ஸ்க்யூஸ் மீ. எனக்கு ஒன்றும் புரியவில்லை. நான் என் பேஷண்ட் மிஸ்டர் ஹேலினைப் பார்க்க வந்தேன்...''

''ஹேலின் செத்து விட்டார்... நீங்கள்... டாக்டர் பெல்தானே?'' என்றார் ஜாரட்.

''ஆம். நான் ஹென்ரி பெல்தான், ஆனல் என்ன இது? ஹேலின் செத்து விட்டாரா? அவருக்கு உடல் நலமில்லை என்பது சரி; ஆனல் அவ்வளவு சீரியஸாக இல்லையே...''

''ஹேலின் இயற்கையாகச் சாகவில்லை. வாய்க்குள் துப்பாக்கி விட்டுச் சுடப்பட்டார்'' என்றார் ஜாரட் சுருக்கமாக.

டாக்டர் பெல் புருவங்களை உயர்த்தினன்.

''ஓ, அப்படியா? வாய்க்குள் துப்பாக்கி விட்டா?... தற்கொலை!'' என்று பெல் பெருமூச்சு விட்டான். ''பாவம், கிழவர் ஒரேயடியாக மனத்தளர்ச்சிக்கு இடம் தந்துவிட்டார். ஆனல் இப்படிச் செய்வார் என்று நான் நினைக்கவில்லை. கனவுகூடக் காணவில்லை...''

''சடலத்தைப் பார்க்கிறீர்களா?'' என்று கேட்டார் ஸ்லேட்.

ஜாரட் ஆஸ்பத்திரியிலிருந்து வந்த இருவரையும் பார்த்து, ''நீங்களும் வாருங்கள்'' என்றார்.

அவர்கள் எல்லோரும் டிராயிங் ரூமுக்குள் போன பிறகு ஸ்லேட் டெலிபோன் டைரக்டரியை எடுத்து, 'ஹ' பிரிவைப் புரட்டினர். சில விநாடிகளில் அவர் தேடிய பெயரைக் கண்டு பிடித்துவிட்டார். 'ஹார்ட்ஸ் டீன்






தொன்னை தொன்னையாகச் சுண்டலைத் தின்று தீர்ப்பதிலோ, ருசியான சுண்டல் தயாரிப்பதிலோ சாம்பியன்கள் பலர் உண்டு. ஆனால் இங்கு நாம் குறிப்பிடுவது ஸ்டிரைக்கர் காயை அபாரமாகச் சுண்டித் தமிழ் நாடு கேரம் சாம்பியனாக உயர்ந்த சுந்தரராஜனே.

ஹரிஜன சேவா சங்கத்தில் கேரம் போர்டு பந்தயம் நடைபெற்றது. அந்தப் பந்தய விழாவில் பரிசு வழங்க ராஜாஜி வந்திருந்தார். நன்றாக ஆடியும் அந்தச் சிறுவன் தோற்றுப் போனான். கேரம் போர்டு ஆட்டத்தைப் பார்த்ததும் ராஜாஜி, "சுண்டறதிலே கூட இத்தனை லாகவம் இருக்கா?" என்று கேட்டுப் பரிசுகளை வழங்கினார். "ஆட்டத்தில் தோற்றாலும் 'ஆறுதல் பரிசு' ராஜாஜியின் கையிலிருந்து பெறும் பாக்கியம் சிறு வயதில் எனக்குக் கிடைத்தது" என்று பெருமையோடு சொல்லிக் கொள்ளும் மனிதர் தமிழக கேரம் போர்டு கழகத்தின் காரியதரிசி பங்காரு பாபு. அவரது இடையறா முயற்சியினால் சென்னை இண்டோர் ஸ்டேடியத்தில் நடைபெற்றன பதினைந்தாவது தேசிய கேரம் போட்டிகள். அவற்றில் பல எதிர்பாராத முடிவுகள் கிடைத்தன. தேசியப் போட்டிகளில் நன்றாக ஆடிப் புகழ் பெற்ற லாஸரைப் பதினெட்டு வயதுச் சிறுவன் சாந்தலிங்கம் 29—26, 29—0 எண்ணிக்கையில் ஜயித்துத் தனியார் ஆட்டத்தில் தனிக்கொடி நாட்டினான். 1967ம் ஆண்டில் முதன் முதலில் நேரு ஸ்டேடியத்தில் சிறுவர்கள் ஆட்டத்தில் ரவிகுமாரை வென்ற சாந்தலிங்கம் வெகு வேகமாக ஆட்டத்தில் முன்னேறி, பங்களூரில் 1970ம் ஆண்டில் இந்தியாவின் இரண்டாவது சிறந்த ஆட்டக்காரர் பரமசிவத்தை ஜயித்திருக்கிறான்.

மற்றோர் எதிர்பாராத வெற்றி சர்க்கார் அச்சகத்தில் பணி புரியும் சுந்தரராஜன் லாஸரை வென்று தமிழக சாம்பியன் ஆனது தான். அனைவரும் லாஸர்தான் ஜயிப்பார் என்று எண்ணியிருந்தனர். அந்த எதிர்பாராத வெற்றியைக் கண்ட பழைய மேயர் சம்பந்தம் தமக்குச் சூட்டிய ரோஜா மாலையைத் திரும்ப சுந்தரராஜனுக்கே சூட்டித் தமிழக சாம்பியனை வாழ்த்தினார்.

---

ஆம்பிரோஸ், பாங்கர், 64, பிராட்பரி சேம்பர்ஸ்.'

அந்த நம்பருக்குப் போன் செய்தார். சில விநாடிகளுக்குள் அவர் ஹார்ட்ஸ்மனைப் போனில் அதட்டிக் கொண்டிருந்தார். இனிக்கப் பேசும் பாங்கர் ஹார்ட்ஸ் மனின் குரல் தடுமாறி ஒலித்தது. ஆனால் அவர் மிக விரைவாய்க் கேள்விகளுக்குப் பதில் சொன்னார்.

ரிஸீவரைக் கீழே வைத்த ஸ்லேட் தம் உதவியாளன் ஒருவனுக்குப் போன் செய்தார். சில விநாடிகளில் .உதவியாளனிடமிருந்து, ஹார்ட்ஸ்மன் சொன்னது சரிதான் என்று பதில் வந்தது.

ஸ்லேட் டிராயிங் ரூமுக்குப் போனார். ஆஸ்பத்திரிச் சிப்பந்திகள் சடலத்தை ஸ்ட்ரெச்சரில் எடுத்து வைத்துக் கொண்டிருந்தனர். ஒரு வழியாக ஜேகப் ஹேஸலினின் பிணம் வீட்டை விட்டு வெளியேறியது.

"ஜாரட், மிஸஸ் கார்டரிடம் எனக்காக நீ ஓர் ஏற்பாடு செய்ய வேண்டும். கணப்புக் கிராதியில் தூசு படிந்திருக்கிறது. புகை போக்கியை அவள் எப்போது சுத்தம் செய்தாள் என்று தெரிய வேண்டும்" என்றார் ஸ்லேட். மலைத்து நின்ற ஜாரட்டின் கையைப் பிடித்து இழுத்தார்; "வா, வா. டாக்டர் பெல் சில நிமிஷங்கள் நமக்காகக் காத்திருப்பார், இருக்கிறீர்களா டாக்டர்? இரண்டொரு விஷயங்கள் நான் உங்களைக் கேட்க வேண்டும்."

டாக்டர் பெல் மேஜையின்மீது மருந்துப் பெட்டியை வைத்து விட்டு, நாற்காலியில் அமர்ந்தான்.

ஸ்லேட் ஜாரட்டுடன் வெளியில் விரைந்தார். ஹாலுக்குப் போனதும் ஜாரட் கசப்புடன் கூறினார்: "முட்டாள்தனமாய் ஏதாவது சொல்லிக் கொண்டிருக்கிறீர்களே! புகைப் போக்கியை எப்பொழுது சுத்தம் செய்தால் என்ன? வீடு கூட்டுபவள் கொலை செய்தாள் என்று உங்கள் அறிவு சொல்லத் தொடங்கி விட்டதா என்ன?"

ஸ்லேட் உதடுகள் மீது விரல் வைத்து மௌனமாய் இருக்கும்படி எச்சரிக்கை செய்தார். ஸ்லேட் டிராயிங் ரூம் கதவின் சாவித் துவாரத்தில் காது வைத்துக் கேட்பதைப் பார்த்தபோது ஜாரட் வெடித்து விடுவார் போலிருந்தது. ஆனால் அவர் வாய் திறக்கு முன் ஜாரட் ஹாண்டிலைச் சுற்றிக் கதவைத் திறக்கலானார்.

என்ன விஷயம் என்று ஜாரட் கேட்பதற்குள் ஸ்லேட் ஒரே பாய்ச்சலில் அறையின் எதிர்ப்பக்கம் சென்றார். கணப்புத் தீ மூட்டும் இடத்தில் டாக்டர் பெல் நின்று கொண்

டிருந்தான். அவன் முதுகு கதவுப் பக்கம் இருந்தது. ஸ்லேட் அவனை நோக்கித் தாவியதும் பெல் திரும்பினான். திகைப்புண்டு அவன் தயங்கிய ஒரு நொடி நேரம் ஸ்லேட்டின் உயிரைக் காத்தது. மறு நொடி நாக படிந்த பெல்லின் விரல்கள் ரிவால்வரின் டிரிக்கரை அழுத்தும்போது ஸ்லேட் அவன் கையைப் பிடித்து விட்டார். குண்டு கூரைக் காரையைப் பெயர்த்தது.

இரண்டு நிமிடங்களில் சார்ஜண்ட் வெயிட் ஜேகப் ஹேலினின் கொலைகாரன் கைகளில் விலங்கைப் பூட்டினான்.

டாக்டர் ஹென்றி பெல்லை இரண்டு கான்ஸ்டபிள்கள் போலீஸ் ஸ்டேஷனுக்கு அழைத்துச் சென்று விட்டார்கள். இன்ஸ்பெக்டர் ஜாரட் தம் ஆபீஸில் சோபாவில் உட்கார்ந்து அமைதியாகப் பைப் புகையைச் சுவைத்துக் கொண்டிருந்தார்.

''உங்களுக்கு டாக்டர் பெல் மீது எப்படிச் சந்தேகம் உண்டாயிற்று என்று இன்னும் எனக்குப் புரியவில்லை'' என்றார் ஜாரட்.

ஸ்லேட் விளக்கினார்:

''ஹேலினின் பையில் இருந்த கடிதம் தான் எனக்கு முதலில் சந்தேகம் உண்டாக்கியது. அதற்குக் கவர் இல்லை. மற்ற எல்லாக் கடிதங்களும் ராக்கில் இருக்க இந்தக் கடிதம் மட்டும் ஹேலினின் பையில் ஏன் இருக்க வேண்டும்? நாம் பார்க்க வேண்டும் என்பது தான் நோக்கம். மிஸஸ் கெம்பின் கார்டும் மேஜையின்மீது எல்லோருடைய பார்வைக்கும் தெரியும்படி கிடந்தது. அதுவும் என்னை யோசிக்கத் தூண்டியது. வீட்டை விட்டு வெளியேறும் போது தான் பார்க்கப்பட வேண்டும், அதுவும் ஒரு போலீஸ்காரரால் பார்க்கப்பட வேண்டும் என்று அவன் விரும்பியதாகத் தெரிகிறது.

''ஹேலின் தற்கொலை செய்து கொண்டதாக நாம் முடிவு செய்தால், நல்லதாயிற்று. கொலை என்று சந்தேகப்பட்டால் மிஸஸ் கெம்பைத் தேடி நாம் அலைய வேண்டும் என்பது கொலைகாரனின் எண்ணம். அற்புதமான யோசனை. கூர்மையான அறிவின் திட்டம். ஆனால் ஹேலின் கொலை செய்யப்பட்ட விதம் இருக்கிறதே—அது ஒரு மேதையின் திட்டம்!''

''ஆ! அதைச் சொல்லுங்கள்!'' என்றார் ஜாரட். ''ஆனால், மிக எளிய திட்டம்! உண்மையாகத்தான் சொல்கிறேன். ஹேலின் வாய் திறந்திருக்க வேண்டும், சரி, டாக்டர் எதற்காக வாய் திறக்கச் சொல்கிறார்? நாக்கைப் பார்க்க! விளக்கடியில் நின்றால் தானே வெளிச்சத்தில் நாக்கை நன்கு பார்க்க முடியும்?... ஆக, அன்றிரவு ஒரு டாக்டர் ஹேலினைப் பார்க்க வந்திருக்க வேண்டும், ஹேலினின் நாக்கைப் பார்ப்பது போல், பார்த்தவாறு வாயில் துப்பாக்கியை விட்டுச் சுட்டிருக்க வேண்டும் என்று ஏற்படுகிறது. ஒரு கிழவனைக் கொல்லச் சுளுவான திட்டம்; துணிவுதான் தேவை.

''ஆனால், பெல் பெரிய சங்கடத்தில் சிக்கிக் கொண்டிருந்தான். சூதாடி. ஹார்ட்ஸ்மேன் என்ற வட்டிக்கடைக்காரனிடம் கடன் பட்டிருந்தான். ஹார்ட்ஸ்மேன் உரிய காலத்தில் பணம் தராவிட்டால் ரத்தத்தையே உறிஞ்சிவிடுவான். பிளாட்டிங் பேப்பரில் தெரிந்த எழுத்துக்களின் உதவியால் ஹார்ட்ஸ்மேனைக் கண்டு பிடித்தேன். இன்றைய முதல் தபாலில் நாலாயிரம் பவுன்டுகள் அசலும், அதன் வட்டியும் ஹார்ட்ஸ்மேனுக்குப் பெல்லிடமிருந்து கிடைக்க வேண்டும். அதாவது, நேற்றுக் கடைசித் தபாலில் பெல் பணம் அனுப்பியாக வேண்டும். ஆகையால் டிராயிங் ரூமில் இருந்தபடியே அவன் ஹார்ட்ஸ்மேன் விலாசத்துக்குக் கவர் ஒன்று எழுதினான். கவரில் பணமும் வீட்டில் எழுதிய கடிதமும் வைத்துக் கடைசித் தபாலில் சேர்த்து விட்டான்.

''பீரோவில் ஹேலினின் ரிவால்வர் இருப்பதைக் கண்டான். அதை அவன் அப்புறப்படுத்தியாக வேண்டும். புகை போக்கியில் ஒளித்து வைத்தான். நான் அதைக் கண்டு விட்டேன். பிறகு பீரோவையும் இரும்புப் பெட்டியையும் பூட்டிச் சாவிகளைக் கிழவனின் பையில் வைத்தான். மறு நாள் வருவதாக அந்தக் கடிதத்தையும் வைத்தான்.

''மிஸஸ் கெம்ப் என்ற பெயரில் அவன் சில கார்டுகளை அச்சிட்டு வைத்திருப்பான் என்று எண்ணுகிறேன். சரி, அதை நாம் காணும்படி மேஜை மீது போட்டான். தோல் பையில் கொண்டு வந்த கோட்டையும் பெண்கள் தொப்பியையும் அணிந்து, தன் ஆடைகளைத் தோல்பையில் வைத்துக்கொண்டு வெளியேறினான். அவனுடைய நடமாட்டத்தைக் கவனித்தால் எம்வுட் சாலையின் கோடியில் ஹார்ட்ஸ்மேனின் கடிதத்தைத் தபாலில் சேர்த்து விட்டு ஒரு டாக்ஸியில் ஏறியிருப்பான். இரும்புப் பெட்டியில் இருந்த எல்லாவற்றையும் அவன் சுருட்டிக்கொண்டான் என்று நான் சொல்ல வேண்டியதில்லை.

''சில நாட்களுக்கு முன்பே பெல் திட்டம் இட்டிருக்க வேண்டும் என்று தெளிவாய்த் தெரிகிறது. டாட்மன் பீட்டில் இருக்கும் நேரத்தைக் கவனித்திருப்பான். அது ஒரு நல்ல பாயின்ட் இல்லையா? குற்றம் முழுதும் மிக நுட்பமாகத் திட்டமிடப்பட்டது. கிட்டத்தட்ட வெற்றியும் பெற்று விட்டது. விளக்கு எரிந்ததும் நல்ல யோசனை; லைட் அணைந்திருந்தால்—ஹேலின் லைட்டுக்கு அடியில் கிடந்தால் திட்டம் பிசுபிசுத்திருக்கும்.

''கிழவனைப் பார்க்க வந்தபோது அவனுக்கு இந்த யோசனை தோன்றியிருக்கும் என்று எண்ணுகிறேன். இரும்புப் பெட்டியில் பொக்கிஷம் இருப்பதும் அவனுக்குத் தெரிந்திருக்கும். நறுவிசான திட்டம்!''

சற்று நேரம் மௌனமாயிருந்த பின் ஜாரட் கேட்டார்: ''மிஸஸ் கெம்ப் வெறும் கற்பனை என்று எப்படித் தீர்மானித்தீர்கள்?''

''லண்டன் டைரக்டரியில் அந்தப் பெயரும் முகவரியும் இல்லை என்று என் உதவியாளன் சொன்னான்... மற்றொரு விஷயம், ஜாரட்! துப்பாக்கி நம்பரை அவன் தேய்த்து மறைத்ததைச் சொல்கிறேன். கெட்டிக்காரன்; எல்லாவற்றுக்கும் சிகரமாக அவன் நிலைமை எப்படி இருக்கிறது என்று பார்க்க இன்று காலையில் வந்தானே, ஹா, அது மகா மகா கெட்டிக்காரத் தனம்! அரைமணி நேரத்துக்கு முன் வந்திருந்தால் எனக்கு அவன் மீது சந்தேகம் ஏற்பட்டிராது!''

**Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31**
**Managing Editor: T. Sadasivam**

# எந்தக் காரணத்தால் உங்களுக்குத் தலைவலி வந்தாலும், அதைப் போக்க ஒரே ஒரு ஸாரிடான் போதும்!

தலைவலி பலவிதம். எந்தக் காரணத்தால் உங்களுக்குத் தலைவலி வந்தாலும், அதை விரைவில் போக்க ஒரே ஒரு ஸாரிடான் சாப்பிட்டால் போதும். ஸாரிடானில் சேர்க்கப் பட்டுள்ள கலவைப் பொருள்கள் தலைவலி, உடல்வலி மற்றும் பல்வலியுடன் கூடவே அநுபவமாகும் சோர்வையும் போக்குகின்றன; மற்றும் இதமளித்து புத்துணர்ச்சியும் ஊட்டுகின்றன. அதுவே ஸாரிடானின் தனிச் சிறப்பு!

**ஸாரிடான்** 

'ரோஷ்'

அதிக வேலை அல்லது சோர்வினால் **தலைவலி**

பேரிரைச்சலால் **தலைவலி**

அயர்ச்சியும், தளர்ச்சியும் மேவிடும் நாட்களில் **தலைவலி**

கடுமையான வெய்யிலால் **தலைவலி**

மூக்கடைப்பு அல்லது ஜலதோஷத்தால் **தலைவலி**

கண்சோர்வு அல்லது கஷ்டப்பட்டுப் படிப்பதால் **தலைவலி**

'ரோஷ்' தயாரிப்பு

